# சுதந்திர தேவிக்கு வரமருள்வோம்!





கி. ராஜேந்திரன்

"சுதந்திர தேவி நின்னைத் தொழுதிடல் மறக்கிலேனே" என்ற மகா கவியின் வரிகளை முதன் முதலாகப் படித்த தினத்திலிருந்து நான் சுதந்திர தேவியை வணங்காத நாள் இல்லை. சமீபத்தில் ஒரு நாள் தேவி என் முன் பிரத்தியட்சமானாள். வேலில் கட்டிய தேசியக் கொடி தாங்கி, ஓவியர் மணியம் வரைந்த படம் போலவே சர்வாலங்கார பூஷிதையாக விளங்கினாள். தேவி பிரத்யட்சமானதில் நான் அதிசயப்படவில்லை. என் தவ வலிமையில் எனக்கு நம்பிக்கை உண்டு. ஆனால் தேவியின் கண்களில் நீர் படர்ந்திருந்ததைப் பார்த்துத்தான் நான் திணறித் திக்குமுக்காடிப் போய்விட்டேன்.

"தேவி! தேவி! என்ன இது? சேச்சே! இப்படி சாமானிய மானுடர் போல் நீங்களும் அழுவதா? நிறுத்துங்கள்!"

"முடியாது; அழுவதற்கு எனக்குச் சுதந்திரம் உண்டு; அதில் நீ தலையிடாதே!" என்று சுதந்திர தேவி கூறி விம்மினாள்.

"இப்போது என்ன குடிமுழுகிப் போய் விட்டது? எதற்காக இப்படிப் புலம்புகிறீர்கள்?" என்றேன் எரிச்சலுடன். "இந்திரா காந்தி ஆட்சிகூட இல்லையே? உங்கள் கால் கை விலங்குகள் தெறித்து விழுந்து விட்டனவே!"

"அது சரி, ஆனால் எல்லாரும் கிடைத்த சுதந்திரத்தை துஷ்பிரயோகம் செய்கிறார்களே" என்றாள்.

"அதெப்படிச் சொல்கிறீர்கள்?"

"ஏன், ஜனதா கட்சியையே எடுத்துக்கொள். கருத்து சுதந்திரம், பேச்சு சுதந்திரம் எல்லாம் இருப்பதாகக் கூறிக்கொண்டு அவரவரும் தத்தமது இஷ்டப்படி பேசி நடந்து கொண்டு கட்டுப்பாடு இழந்தார்கள். கட்சி உடைந்தது, ஆட்சி கவிழ்ந்தது...."

"அதனால் என்ன விபரீதம் நேர்ந்துவிட்டது?" என்று நான் வினவினேன். "தேவி! நீங்கள் ஒரு பக்கத்தை மட்டும் பார்க்கிறீர்கள். இன்னொரு பக்கத்தையும் நோக்குங்கள். சரண்சிங், ஜகஜீவன்ராம் இரண்டு பேரும் அரசியலில் புகுந்த நிமிஷத்திலிருந்து பிரதமராகும் ஆசையை வளர்த்துக் கொண்டே வந்திருக்கிறார்கள். அந்த அபிலாஷையை நிறைவேற்றிக் கொள்ளும் சுதந்திரம் அவர்களுக்கு இருக்க வேண்டாமா? சரண் சிங் ஐந்தாறு வாரம், அப்புறம் ஜகஜீவன்ராம் ஐந்தாறு மாதம் பிரதமர் பதவியில் இருந்துவிட்டுப்போகட்டுமே. அவர்களுடைய சந்தோஷத்தை, அவர்களுடைய சீடர்களின் மகிழ்ச்சியை நினைத்துப் பாருங்கள்; உங்களுக்கு அழுகையே வராது!"

"உண்மைதான்!" என்று அதிசயப்பட்டுச் சொன்னாள் தேவி. "நான் இந்த நோக்கில் சிந்திக்கத் தவறி விட்டேனே!" என்று கூறிப் புடவைத் தலைப்பால் கண்களைத் துடைத்துக் கொண்டாள். பின்னர், "அது சரி, தமிழ் நாட்டில் நூற்பாலை, நெசவாலை வேலைநிறுத்தம் இத்தனை நாட்கள் நீடித்திருக்க வேண்டுமா? கோடிக் கணக்கான ரூபாய் மதிப்புள்ள உற்பத்தி பாதிக்கப்பட்டிருக்க வேண்டுமா? இந்த ராஜியைக் கொஞ்ச காலம் முன்பே செய்துகொண்டிருக்கக் கூடாதா? இதெல்லாம் சுதந்திர துஷ்பிரயோகம் ஆகாதா?"

"அழகுதான் போங்கள்" என்றேன் நான். "இது மாதிரி வேலைநிறுத்தங்கள், ஆர்ப்பாட்டங்கள், போராட்டங்கள் எல்லாம் இல்லாமலிருந்தால் எதிர்க் கட்சி என்று ஒன்று இருப்பதே மக்களுக்கு மறந்துவிடும். இந்த வேலை நிறுத்தம் காரணமாக எதிர்க் கட்சித் தலைவர்கள் எத்தனை விதமான அறிக்கைகள் விட்டார்கள்! அவர்கள் முன்னிலும் பிரபலமாக முடிந்ததா இல்லையா! அதே நேரத்தில் அரசின் — முதல்வரின் — ஆதரவு தங்களுக்கு இருப்பதாக எண்ணி மில்

முதலாளிகள் வேலைநிறுத்த காலத்தில் உறுதியாக இருந்து கர்வமும் மகிழ்ச்சியும் அடைந்தார்களா இல்லையா? கடைசியில் முதல்வர் எம். ஜி. ஆர். தம்மால்தான் சிக்கலை நீக்கிச் சமரசம் செய்து வைக்க முடிந்தது என்று காட்டிக் கொண்டு நல்ல பெயர் எடுத்தாரா இல்லையா? மில்கள் ஓடாததால் மின்சாரம் மிச்சமாயிற்று இல்லையா? வழக்கமாக ஆண்டின் இந்தக் காலகட்டத்தில் ஏற்படும் கடுமையான மின்வெட்டு தவிர்க்கப்பட்டதா இல்லையா? உபரியாகத் தேங்கிக் கிடந்த துணிகள் விற்பனையாகி 'ஸ்டாக்' குறைந்ததா இல்லையா? இதையெல்லாம் எண்ணிப் பார்க்காமல், 'சுதந்திரம் துஷ்பிரயோகமாகிறது' என்று கதறினால் என்ன அர்த்தம்?''

தேவியின் அழுகை ஓய்ந்தது மட்டுமல்லாமல் இப்போது அவர் புன்னகை புரியவே ஆரம்பித்து விட்டாள். ஆனால் மறுபடியும் திடுமெனச் சந்தேகம் கொண்டவளாக, ''அது சரி, எழுத்துச் சுதந்திரம், பத்திரிகை சுதந்திரம் என்று கூறிக் கொண்டு ஆபாசம் மலிந்து விட்டதே. பொய்யான செய்திகளைத் தருவதும், திரித்துக் கூறுவதும் பரபரப்பூட்டுவதற்காக வதந்திகளைக் கிளப்பி விடுவதும் மலிந்து விட்டனவே'' என்றாள்.

''உண்மைதான். ஆனால் இதனால் ஏற்படும் நன்மைகளை நீங்கள் யோசித்தீர்களா?'' என்று கேட்டேன். ''இப்படி ஏதாவது பரபரப்பான கதையை அல்லது செய்தியை வரி விடாமல் படித்தும் பிறகு அதைப் பற்றிச் சுவாரஸ்யமாய், சாவகாசமாய்ப் பேசியும் ஜனங்கள் பொழுது போக்குகிறார்கள். இவை இல்லையென்றால் அவர்களுக்கு வீட்டுக் கவலை வந்து விடும். பெண்ணுக்குக் கல்யாணம் பண்ணணுமே, பள்ளிக்கு, கல்லூரிக்கு ஸ்பெஷல் ஃபீஸ் கட்டணுமே, விலைவாசிகள் ஏறுகின்றனவே என்றெல்லாம் கவலைகள் ஆட்கொள்ள அதன் விளைவாகக் குடல் புண் — அல்ஸர் — வந்து அவதிப்படுவார்கள். எனவே மக்கள் தங்கள் குடும்பப் பிரச்னைகளை மறந்து கவலையின்றி இருக்கவும் அவர்கள் ஆரோக்கியம் காக்கவும் பத்திரிகைகளின் இந்தப் போக்கு உதவுகிறது. இது எப்படிச் சுதந்திரத்தை துஷ்பிரயோகம் செய்வதாகும்?''

இப்படியே நான் பல வகைகளிலும் சுதந்திரதேவி எழுப்பிய சந்தேகங்களுக்குப் பதில் அளித்து அவள் கவலைகளைத் தீர்த்து வைக்கவும் அவள் கலகலவென்று சிரிக்கவே ஆரம்பித்து விட்டாள். அழுகை இருந்த இடம் தெரியாமல் போய்விட்டது. ''கடைசியாக ஒரு கேள்வி'' என்று பத்திரிகை நிருபரைப் போல் என்னை வினவினாள் தேவி. ''ஒவ்வொரு அம்சத்திலும் நீ சொல்வது போல் மறு பக்கத்தைப் பார்த்தால் மகிழ்ச்சியாகத்தான் இருக்கிறது. ஆனால் மொத்தத்தில் தேசம் குட்டிச்சுவராகி வருகிறதே? என்ன செய்ய?''

''கவலைப்பட வேண்டாம். இன்னும் சில காலம் நீங்கள் பொறுத்திருந்தால் எல்லாம் சரியாகப் போய்விடும்'' என்றேன்.

''அதெப்படிச் சொல்கிறாய்?''

''ஏற்கெனவே மொரார்ஜி தலைமையில் ஜனதா ஆட்சியைப் பார்த்து மக்கள் சிரித்தார்கள். இனி சரண் சிங் ஆட்சியைக் கண்டு மக்கள் விழுந்து விழுந்து சிரிப்பார்கள். அப்புறம் ஜகஜீவன்ராம் பிரதமராவார். மக்கள் விலாவைப் பிடித்துக் கொண்டு ஒரேயடியாகச் சிரிப்பார்கள். அதன் பிறகு ராஜ்நாராயண் முறை வரும். அவர் பிரதமராகி நடத்தும் துக்ளக் ஆட்சியில் மக்கள் அடக்க மாட்டாமல் வயிறு வெடிக்கச் சிரிப்பார்கள். ஏராளமானவர்கள் வயிறு வெடிக்கச் சிரித்துச் செத்துப் போனதும் ஜனத்தொகை குறையும். ஜனத் தொகை குறைந்ததும் தேசத்தில் சுபிட்சம் தன்னால் பெருகிவிடும்!''

''அப்படியா! நமது மக்கள் அவ்வளவு நகைச்சுவை உணர்வு உள்ளவர்களா? ராஜ்நாராயணைக் கூடப் பிரதமராக ஏற்பார்களா?'' என்றாள் தேவி.

''பேஷாக ஏற்பார்கள்; நான் உங்களுக்கு வரம் தருகிறேன்!'' என்றேன்.

தேவி திருப்தியும் மன நிம்மதியுமுற்று மறைந்தாள்.

# தீப்பிடிக்காத சினிமா!

தீப்பிடிக்காத திரை அரங்குகள் வேண்டுமென்றார் முதல்வர் எம்.ஜி.ஆர்.— இன்றல்ல. 1977ம் ஆண்டிலேயே சொன்னார்.

மேற்கூரையுடன் கூடிய நிரந்தரத் திரையரங்கைக் கட்ட சுமார் பத்து லட்ச ரூபாய் தேவை. சுமார் எழுநூறு பேர் உட்கார்ந்து பார்க்கலாம். ஆனால் திறந்தவெளி நிரந்தரத் திரையரங்குக்கோ ஒரு லட்சம் ரூபாய் இருந்தால் போதும், கட்டிவிடலாம். எவ்வளவு பேர் வேண்டுமானாலும் அமர்ந்து பார்ப்பது போல் கட்டலாம். இந்த இரண்டு வகைக்கும் நடுவில் டூரிங் சினிமா என்று ஒரு வகையுமிருக்கிறது. இது நிரந்தரமல்ல. மூன்று வருடம்தான் இதற்கு ஆயுள் காலம். அப்படி ஆயுள் காலம் குறைவாக உள்ளதால்தான் சீக்கிரம் எவ்வளவு பணம் பண்ணலாம் என்பதே இவர்களின் நோக்கமாக இருக்கும். அப்போதுதான் தீவிபத்துக்களும் அதிகமாக நேருகின்றன. ஒரு காட்சிக்கும் மற்றொரு காட்சிக்கும் இடைவேளை அதிகம் விட மாட்டார்கள். மூன்று திரைப்பட இசைத்தட்டுக்கள் போடுமிடத்தில் ஓர் இசைத்தட்டைப் போட்டுவிட்டுப் படத்தை ஆரம்பித்து விடுவார்கள். படம் ஆரம்பித்து விட்டதே என்ற அவசரத்தில் குடித்துக் கொண்டிருந்த பீடியைத் தூர எரிந்துவிட்டு மக்கள் உள்ளே ஓடுவார்கள். காய்ந்து இருக்கும் ஓலை மண்ணெண்ணெயை விட மிக வேகமாகப் பற்றிக்கொள்ளும்.

''சினிமாடோகிராப்'' சட்டப் பிரகாரம் ஒரு திரைப்பட அரங்கு அமைத்தால்தான் மக்களின் பாதுகாப்புக்கு வழி செய்தவர்களாவோம். நிரந்தரத் திரையரங்குகளைவிட இம்மாதிரி ஓலைக்கொட்டகைகளில் தீயணைப்புச் சாதனம் அதிகம் வைத்துக் கொள்ள வேண்டும். இதைச் சட்டமாகவே கொண்டு வரவேண்டும்.

ஓலைக் கொட்டகைகளில் மின் விசிறி கிடையாது. பகல் காட்சிகள் என்று வந்தால் கறுப்பு நிறத் துணியினால் கதிரவனின் ஒளி உள்ளே வராமலிருக்க இறுக்கியே மூடி ஆகவேண்டும். வெளியே இருந்து காற்றே வராவண்ணம் மூடிப் பல நூறு பேர்களை ஓர் இடத்தில் அடைத்து வைப்பது ஆரோக்கியத்தைப் பாதிக்காதா? மின் விசிறியோ, உள்ளிருந்து அசுத்தக் காற்றை வெளியேற்றும் எக்ஸாஸ்ட் விசிறியோ இல்லாத கொட்டகைகள் பகல் காட்சி காட்டாமல் இருப்பதே நல்லது.

சென்னை போன்ற பெரிய நகரங்களிலேயே திரை அரங்குகள் பிரச்னையாக உள்ளன. ஃபான் நிறுத்தினால்கூட ரசிகர்களுக்குத் தெரியும். படம் முடியு முன்னரே ஏ.ஸி. நிறுத்தி விட்டால் தெரியப் போவதில்லை. ஆனால் ஆரோக்கியத்துக்கு மிகவும் கேடு விளைவிக்கும். இன்றென்று, அரங்கை விட்டு வெளிவர அரை மணி நேரமாகிறது. சிறுநீர் கழிக்கும் இடங்கள் சரிவரப் பராமரிக்கப்படுவதில்லை.

மக்கள் சீக்கிரம் வெளியேற ஒன்றுக்கு மேற்பட்ட வாசல்கள் தேவை. அதுமட்டுமல்ல, அவசரத்தில் திறந்துவிடப்பட ஒரு வாசல் நிச்சயம் இருக்க வேண்டும். அது இல்லாமல் கூட இப்போது அரங்குகள் உள்ளன. ஒன்றுக்கு மேற்பட்ட வாசல்கள் இருந்து விட்டாலும் அவற்றைத் திறந்து விடுவதில்லை. அதிகப் பணியாளர்களைப் போடாமல் ஒரே ஒரு வாசலைத் திறந்து வைத்து மக்களை வெளியேற்றுகிறார்கள்.

தொடர் திரைக் காட்சிகள் தேவையில்லாத ஒன்று. இந்தக் காட்சிகளுக்கு யார் யார் வருகிறார்கள் என்று பார்த்தால் தவறான செய்கைகளுக்கும் நிகழ்ச்சிகளுக்குமே இவை இடமாக அமைகின்றன என்பதைப் புரிந்து கொள்ளலாம். இருட்டுக்கு விலை கொடுக்கிறார்கள்.

சோமங்கலம் கிராமத்தில் நான் இந்தியாவிலேயே முதல் திறந்தவெளி கலையரங்





✖ என். கிருஷ்ணசுவாமி

✖ சோமங்கலத்தில் திறந்த வெளியரங்கு

கைக் கட்டினேன். இந்தக் கலையரங்கில் பாதுகாப்பைப் பொறுத்தவரை கவலை ஏதுமில்லை. காரணம் படத்தைப் பார்த்துக் கொண்டிருப்பவர்களின் உடைகளை பற்றிக் கொண்டால் ஒழிய வேறு தீப்பிடிக்க வழியே இல்லை. உட்காரும் பெஞ்சுகள் கூட சிமெண்டால் ஆனவை. சுற்றிலும் சிமெண்ட் சுவர். சுவரிலிருந்து உட்காரும் பெஞ்சுவரை பத்தடி வெட்டவெளி. இதன் வெண் திரை கூடச் சிமெண்டினால் ஆனதுதான். வெள்ளைப் பெயிண்ட் அடிக்கப்பட்டிருக்கும். படம் காட்டும் கருவி உயரத்தில் மாடியில் இருக்கிறது. அதற்கும் படம் பார்ப்பவர்களுக்கும் சம்பந்தம் இடையாது. இதைப் போல பல் வேறு விதமான பாதுகாப்பு நடவடிக்கைகளைக் கருத்தில் கொண்டுதான் இந்த வெட்டவெளி கலையரங்கை நான் நிர்மாணித்தேன்.

''மழை வந்தால் என்ன செய்வீர்கள்?'' -இது பல பேர் என்னிடம் கேட்கும் கேள்வி. அதற்கு நான் ஆதாரத்துடன் பதில் தர முடியும். சென்ற வருடம் 48 காட்சிகள் மட்டுமே ரத்து செய்யப்பட்டிருக்கின்றன. (48 என்றால் 24 நாள். ஒரு நாளைக்கு இரண்டு காட்சிகள்தான். பகல் காட்சி கிடையாது.) அதிலும் இரண்டு காட்சிகள் ரத்தானதுக்குக் காரணம் மின்சாரம் இல்லாததுதான். ஆக ஒரு வருடத்தில் 46 காட்சிகள் மட்டுமே ரத்தாயிருக்கின்றன— மழையினால். இது ஒன்றும் பெரிதல்லவே.

என்னைப் பொறுத்தவரை பணம் பண்ணுவதை விட மக்களுக்குப் பாதுகாப்புடன் மகிழ்ச்சி அளிப்பதுதான் முக்கியம்.

என். ஜெநஞ்சைவாமி கூறக்கேட்டு
எழுதியவர்: அசோக்குமார்

---

★ ''டிரைவர், முதல் அஞ்சு கிலோ மீட்டர் தூரம் ஐம்பது கிலோ மீட்டர் வேகத்தில் போங்க; அப்புறம் பத்து கி.மீ. தூரம் நாற்பது கி.மீ. வேகத்தில் போங்க.''

''ஏண்டா தம்பி?''

''மொத்தம் எவ்வளவு நேரமாகுதுன்னு சொல்லுங்க. வீட்டுக் கணக்குக் கொடுத்திருக்காங்க.''— ராமசாமி

★ ''கல்லூரியில் சிறுகதை எழுத்தாளர் உருவாக நல்ல வாய்ப்பு இருக்கிறது.''

''எப்படி?''

''பணம் அனுப்பக் கேட்டு அப்பாவுக்கு எழுத எத்தனை எத்தனை காரணங்களை அவர்கள் கற்பனை செய்து எழுத வேண்டியிருக்கிறது!'' —ஆர். எம்.

★ ஆசிரியர்: மாணவ மாணவிகளே ஏதேனும் சந்தேகமிருந்தால் இனி கேட்கலாம்.

ஒரு மாணவன்: சார் பெல் அடிக்க இன்னும் எவ்வளவு நேரம் சார் இருக்கு?

—மன்னை இளமதி காந்தன்

★ சர்வர்: எலுமிச்சம்பழ சேவை வேணுமா? தேங்காய் சேவை வேணுமா?

அவர்: ரேடியோ சிலோனில் அடிக்கடி 'ஆசிய சேவை'ன்னு சொல்றாங்களே அது ஒரு பிளேட் கொண்டுவா!

-எஸ். சந்திரசேகர்

★ கண்ணன்: என்னப்பா சர்வர்? பேப்பர் ரோஸ்ட் இவ்வளவு வழ வழான்னு இருக்கே?

சர்வர்: இது 'ஆர்ட் பேப்பர் ரோஸ்ட்' சார். அதான் இவ்வளவு வழ வழுப்பாக இருக்கு.

★ தயாரிப்பாளர்: குளிக்கிற காட்சியில் நம்ப ஹீரோயின் நடிக்க மாட்டாங்களா? ஏன்?

டைரக்டர்: அவர் மூணு மாசம் குளிக்காம இருக்காங்களே தெரியாதா உங்களுக்கு?

—லலிதா செல்லப்பா

★ ''என் மாமியார் என்னை உட்கார்த்தி வைத்து விட்டு எல்லா வேலைகளையும் தானே செய்து விடுகிறார்!''

''சூழ்ச்சி! தான் மட்டும் நன்றாக வேலை செய்து உடம்பை ஆரோக்கியமாக வைத்துக் கொண்டு, உன்னைச் சீக்காளியாக்கிவிடப் பார்க்கிறார்.''

—கோ. தீபா

★ ''நம்ம கணக்கு டீச்சருக்கு இனிமே கோழி டீச்சர்னு பேர் வைக்கலாம்.''

''ஏண்டி அப்படி?''

''அவங்கதானே எல்லோருக்கும் முட்டை போடுறாங்க?''

-விசாலாட்சி நடராஜன்



# இடி இடியென்று சிரியுங்கள்!



# சிந்தனைக்குச் சில...

நா. மகாலிங்கம்

**வா**ன சாத்திரத்தின் இன்றைய நவீன விஞ்ஞான வசதிகளைக் கொண்டு ஆராயும் போது நமக்குப் பல வரலாற்று உண்மைகள் தெரிய வருகின்றன. ராமனும் கிருஷ்ணனும் இதிகாசக் கற்பனை நாயகர்கள் அல்ல. இந்த நாட்டை ஆண்ட மன்னர்களில் மிக முக்கிய மானவர்கள் என்பதையும் அறிய முடிகிறது. ராமர், கிருஷ்ணர் ஆகிய மன்னர்களின் காலத்தையும் கண்டு பிடிக்க முடிகிறது. கி.மு. 4400 ஆம் ஆண்டில் ராமர் பிறந்திருக்கிறார். கி.மு. 3200ஆம் ஆண்டில் கிருஷ்ணர் பிறந்திருக்கிறார். கி.மு. 1500ஆம் ஆண்டில் ஆதி சங்கரர் பிறந்திருக்கிறார் என்று தெளிவாகத் தெரிந்து கொள்ள முடிகிறது.

இதை எப்படித் தெரிந்து கொள்ள முடிகிறது? ராமாயணத்திலும், மகாபாரதத்திலும், ஆதிசங்கரர் வரலாற்று நூலிலும் அவர்கள் பிறந்தபோது சூரியன் எந்த நட்சத்திரத்தில் எந்த பாதத்தில் இருந்தான் என்று தெளிவாகக் குறிப்பிடப் பட்டிருக்கிறது. அதை வைத்து—வான சாஸ்திரக் கணக்கைக் கொண்டு ஆராய்ந்தால், ராமர், கிருஷ்ணர், ஆதி சங்கரர் தோன்றிய காலத்தைத் திருத்தமாகக் கணக்கிட்டுக் காண முடிகிறது.

ராமனும் கிருஷ்ணனும் ஆண்ட காலத்தில் அவர்கள் வழிபட்ட கடவுளாகச் சிவபெருமான் இருந்திருக்கிறார். காலத்தால் ராமனும், கிருஷ்ணனும் கடவுளானது போல், ராமனும் கிருஷ்ணனும் வாழ்ந்த காலத்தில் அவருக்கு முன் சக்கரவர்த்தியாக இருந்த சிவன், சிவபெருமானாக வழிபடப்பட்டிருக்கிறார்.

வீர சைவம் சிவனை ஒரு சித்தர் என்றே சொல்கிறது. 'சிவன் உண்டாக்கிய யோகத் துறைக்கு 'சிவயோகம்' என்றே பெயர். இது ஞான யோகத்தில் ஒரு முக்கியமான பகுதியாகக் கருதப் படுகிறது. சிவன் ஞான சித்தனாக இருந்ததுடன், மன்னராகவும் இருந்திருக்க வேண்டும். சக்கரவர்த்தி தட்சன் மகளைச் சிவன் திருமணம் புரிந்து கொண்டதிலிருந்து இதை உணர முடிகிறது என்று வீர சைவ ஞானிகள் கருதுகிறார்கள். சிவன், சக்கரவர்த்தி தட்சன் மகளைத் திருமணம் செய்து கொண்ட காலத்தில் சூரியன் இந்த நட்சத்திரத்தில் இந்த பாதத்தில் இருந்தான் என்று சம்ஸ்கிருத சிவபுராணத்தில் தெளிவாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதைக் கொண்டு சிவன் திருமணம் செய்து கொண்டது கி.மு. 17000 ஆம் ஆண்டில் என்று கணக்கிட்டிருக்கிறார்கள்.

நம் நாட்டில் சிவ வழிபாடு இருப்பது போலவே உலகின் பல பகுதிகளிலும் சிவ வழிபாடு இருந்திருக்கிறது என ஆராய்ச்சியாளர் இப்போது கண்டுபிடித்திருக்கிறார்கள்.

பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முன்னும் தென் இந்தியாவில் இருந்த அறிஞர்கள் உலகம் முழுவதும் சென்றிருக்கிறார்கள். அவர்கள் சென்ற நாடுகளில் தங்கள் சிவ வழிபாட்டைப் பரப்பியிருக்கிறார்கள் என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள்.

வான்மீகி, இராமனுக்கு இளவரசுப் பட்டம் கட்டப் பாரத நாட்டு அரசர்களையெல்லாம் கூட்டித் தசரதர் ஆலோசனை நடத்துகிறார் என்ற செய்தியை இராமாயணத்தில் கூறுகிறார். இந்த ஆலோசனை சபையில் தமிழ் மன்னனான பாண்டியனும் கலந்து கொள்கிறான். அவனுடைய ஆலோசனையையும் தசரதர் கேட்கிறார்.

அனுமன் சீதையைத் தேடி இலங்கைக்குப் போகிறான். அவனுக்குத் தென் திசையில் வழிகள் பற்றி விளக்கும்போது ''தமிழ் நாட்டில் இயற்கை அழகிலும், தமிழின் இனிமையிலும், அதன் பண்பாட்டிலும் மயங்கி நின்றுவிடாதே'' என்று அவனை எச்சரித்து அனுப்பியதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

இராவணன் சபையில் கும்பகர்ணனும் இராவணனும் உரையாடுகிறார்கள். இந்த உரையாடலைப் பற்றி வான்மீகி குறிப்பிடும் போது இராவணனும் கும்பகர்ணனும் பேசிக்கொண்ட மொழி 'தமிழ்' என்று தெளிவாகக் குறிப்பிட்டிருக்கிறார்.

இராமன் வாழ்ந்த காலத்திலேயே 6400 ஆண்டுகளுக்கு முன்னதாகவே தமிழ்ப் பண்பாடு மிக உயர்ந்த நிலையில் இருந்தது என்பதைப் பற்றி வான்மீகி பேச வேண்டுமானால் தமிழ்ப் பண்பாடு அந்த அளவுக்கு வளர அதற்கு எத்தனை ஆயிரம் ஆண்டுகள் முன்னால் அது தோன்றியிருக்க வேண்டும்!



தமிழ் நாட்டுத் தமிழர் பேரவை மாநாட்டில் தலைமை உரையிலிருந்து ஒரு பகுதி

**Kalki Shopping Page**

# STANDARD

## Solid State TV




பேர்பெற்ற டிவிகளின்
பெயர்களை தெரிந்து
வைத்து இருப்பது என்பது
ஒன்று.

நிகழ்ச்சியைப் பார்த்து
தரத்தை அறிவது என்பது
மற்றொன்று.

ஸ்டாண்டர்டு டிவி தன் பெயருக்கு
ஏற்றவாறு தரமுள்ளதாக இருக்கிறது.

சுலப தவணை முறையில் கிடைக்கும்

# STANDARD TV

பெயருக்கேற்ற தரமுள்ள டிவி.

M/s T. V. HOUSE,
61, IVth Avenue, Ashok Nagar,
Phone: 423561

M/s VELTRONICS,
No. 159, Purasawalkam High Road,
Phone: 34599



JOHNSON



MECO-MIX



MeenaMix



Mixion



Sumeet

ரொக்கம் மற்றும் முதலில் 1/3 மீதி 10 மாதங்களில்

எதை வேண்டுமானாலும் தேர்ந்து எடுங்கள்

# தாஸ்

நம்பிக்கையான பொருட்களின்
நம்பிக்கையான விற்பனையாளர்

W 109 III அவின்யு,
அண்ணாநகர்,
சென்னை–600 040.
போன்: 614063.



ALLWYN DYANORA television



ALLWYN CHEM Godrej ZENITH

**FREE! DEMONSTRATION**

on every Saturday
5 PM to 7 PM

Washing Machine Washotex



Orient

# Kalki Shopping Page


காங்கிரஸ் ஆதரவு
இ. காங்கிரஸ் அகாலி தளம் நிச்சயமற்ற ஆதரவு
அ.இ.அ.தி.மு.க. ஆதரவு
அரசியல் போக்கு
மக்களவையில் நம்பிக்கை ஓட்டு


சிரிக்காதிங்க! இந்தக் கைத்தடி தான் இந்திராவைத் துரத்தி மொரார்ஜியை விரட்டி இப்போது உங்களையும் மிரட்டுகிறது!
மிரட்டல்
மத்திய அமைச்சர்கள்


சரண்சிங்குக்கு ஆதரவு
ஜனதாவுக்கு ஆதரவு
சரண்சிங்குக்கு ஆதரவு
ஜனதாவுக்கு ஆதரவு




கல்கி

1979 ஆகஸ்டு 12
சித்தார்த்தி ஆடி 27
மலர்: 38 இதழ்: 2




தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற - எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.

# சத்தியத்துக்கு ஒருவர்!

சரண்சிங் மந்திரி சபை ஆரம்பத்திலேயே கவிழ்ந்துவிடும்போல் தோன்றி இப்போது ஒரு மாதிரியாக நிமிர்ந்து நிற்கிறது. பதவிப் பிரமாணத்துக்கு வர வேண்டியவர்கள் வந்து சேராமல் போக ராஷ்டிரபதி அவர்கள் பெயர்களை நீக்கினார். பின்னர் அவர்களே மேலும் சிலரைத் துணை சேர்த்துக்கொண்டு வந்து சேர்ந்தார்கள்.

ஆக மொத்தம் இந்திரா காங்கிரஸிலிருந்து பிரிந்து வந்தவர்களும், ஜனதாவிலிருந்து பிரிந்து வந்தவர்களும் உன்பாடு, என்பாடு, உடன்பாடு என்று அமைச்சரவையை அமைத்து விட்டார்கள். சரண்சிங்கின் ஜன்ம ஆசை நிறைவேறியது. அடுத்து ஜகஜீவன் ராமின் ஜன்ம ஆசையும் நிறைவேறும் என எதிர் பார்க்கலாம். நம்பிக்கை ஓட்டெடுப்பு நடக்கிற வரைதான் சரண்சிங் அமைச்சரவை நீடிக்கும் என்று ஜகஜீவன் சொல்லிக் கொண்டிருக்கிறார். பத்திரிகைகள் மேலும் பரபரப்புச் செய்திகளுக்காகக் காத்திருக்கின்றன!

எமர்ஜென்சி காலத்தில் இந்திராவின் அடக்குமுறைக்குத் துணை நின்றவர்களை யெல்லாம் மறுபடி மந்திரி பதவியில் அமர்த்தியாகிவிட்டது. சௌத்ரிஜியின் இந்தக் காரியத்தை வேடிக்கை என்பதை விட வேதனை என்றுதான் வர்ணிக்க வேண்டும். ஒத்துழைப்புத்தரத் தீர்மானித்த காங்கிரஸ், 'எங்கள் கட்சியில் உள்ள இளைஞர்கள் சிலரை மந்திரிகளாகப் போட்டுக் கொள்ளுங்கள், அவர்கள் அனுபவம் பெறட்டும். நாங்கள் ஒதுங்கி இருந்து ஆலோசனை கூறுகிறோம்' என்று சொல்லியிருக்கலாம். நாளை ஒருவேளை மந்திரி சபை கவிழ நேர்ந்தாலும் பெருந்தலைவர்களின் பெருமை பாதிக்கப்படாமலிருக்கும். ஆனால் மீசை நரைத்தும் ஆசை மறக்காத கிழவர்கள் விட்டார்களில்லை. எல்லாரும் மந்திரிகளானார்கள்.

இந்திரா காந்தி 'டபுள் ரோல்' நடிக்கிறார். மத்தியில் புதிய மந்திரி சபைக்கு ஆதரவு என்று கூறும்போதே பீகாரில் ஆட்சியிலுள்ள ஜனதாவுக்கு ஆதரவு தந்து ராஜ்நாராயணனின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொண்டார். அவர் டபுள் ரோல் என்றால் நான் நாலு ரோல்கூட நடத்திக் காட்டுவேன் என்கிறார் எம்.ஜி.ஆர்? அவர் யாரை, எப்போது, எதற்கு ஆதரிப்பார் என்பதே புரியவில்லை. ஸ்திரத்தன்மைக்கு ஆதரவு என்கிறார். ஸ்திரத்தன்மை என்பது மட்டும் ஆதரவு தர நியாயமான காரணமாகிவிடாது. எப்படிப்பட்ட ஸ்திரத் தன்மை, எவ்விதம் பெறப்படும் ஸ்திரத் தன்மை என்றும் பார்க்க வேண்டும். நாளை ராணுவ ஆட்சி வந்தால் அல்லது இந்திராவின் சர்வாதிகாரம் செல்லுபடியானால் அவையும் ஸ்திரத்தன்மைகள்தாம்.

இந்திராவின் ஆதரவுடன் பதவிக்கு வந்துள்ள சரண்சிங் அமைச்சரவையில் கன்னா சட்ட மந்திரியாகியிருப்பது பரிதாபம். இந்திராவின் ஆட்சி காலத்தில் சக நீதிபதிகளுடன் மாறுபட்டு மக்களின் சுதந்திரங்களை உறுதிப்படுத்தித் தீர்ப்பளித்த ஒரே நீதிபதி கன்னா. இதனால் இந்திராவின் அதிருப்தியைச் சம்பாதித்துக் கொண்டார். நியாயமாக இவருக்குக் கிடைத்திருக்க வேண்டிய சுப்ரீம் கோர்ட் பிரதம நீதிபதி பதவி கிடைக்காமல் போயிற்று. அதே கன்னா இன்று சட்ட மந்திரி என்ற முறையில் நெருக்கடி கால அட்டூழியங்களுக்காக இந்திரா மீது எப்படி நடவடிக்கை எடுக்கப் போகிறார்?*

மொரார்ஜி தேசாய் இன்னும் சற்றுப் பெருந்தன்மையுடன் நடந்து கொண்டிருந்தால் ஜனதா ஆட்சி தொடர்ந்திருக்கும். பிரதமர் பதவியை விட, அவர் கடைசிவரை பிடிவாதமாகப் பற்றிக் கொண்டிருந்த நாடாளுமன்ற

---

* இந்த இதழ் அச்சுக்குப் போகும்போது திரு கன்னா மந்திரி பதவியை ராஜினாமா செய்துவிட்டதாகச் செய்தி கிடைத்திருக்கிறது.

கட்சித் தலைவர் பதவியை விட உன்னதமான பதவியில் — மக்களின் மனங்களில் அவர் வீற்றிருந்திருக்கலாம். வாய்ப்பை அவர் நழுவ விட்டு விட்டார்.

இவ்வளவுக்கும் இடையில் கௌரவமாக, கண்ணியமாக, கட்டுப்பாட்டுடன் நடந்து கொண்டது ஜனசங்கமும் அதன் தலைவர்களும்தான். தம்மைக் கூடியவரை பின்னணியிலேயே தள்ளிக் கொண்டு ஜனதாவின் ஒற்றுமைக்காக இந்நாள்வரை பாடுபட்டு வந்த வாஜ்பாயி இப்போதுதான் மனம் நொந்து ஒரு நீண்ட கட்டுரை எழுதியிருக்கிறார். அதன் சாரமான பகுதிகளைப் பார்ப்போம்:

1977 மார்ச்சில் மக்கள் ஜனநாயகத்தில் தங்களுக்குள்ள நம்பிக்கை அசைக்க முடியாதது என்று காட்டிய தருணத்தில் கூடவே பிரதமர் பதவிக்கான போராட்டமும் பேராசையும் ஆரம்பமாகி விட்டன. அன்றே ஜனநாயக மரபுப்படி தலைவர் தேர்தலை நடத்தியிருக்க வேண்டும். அவ்வாறின்றிக் கொஞ்ச காலம் ஒருவர், பின்னர் அவர் ராஜிநாமா செய்ய வேறு ஒருவர் அப்பதவிக்கு வருவார் என்று பேரம் கூடப் பேசப்பட்டதாம்! இந்தப் பதவிப் போராட்டங்களை விவரிக்கும் வாஜ்பாயி விசனத்துடன் மேலும் எழுதுகிறார்:
நல்லதொரு தலைமை சிறப்பாகச் செயல்பட்டிருந்தால் நாடு தழுவிய விதமாக ஜனதா கட்சிக்கு அஸ்திவார மிட்டிருக்கலாம். மாவட்ட, மாநில மகாநாடுகளைக் கூட்டிக் கட்சியை வளர்த்திருக்கலாம். உழைப்பாளர்களையும், சிந்தனையாளர்களையும் தொழிற் சங்கத் தலைவர்களையும், யுவர்களையும் யுவதிகளையும் சேர்த்திருக்கலாம். எல்லாம் நழுவ விடப்பட்ட வாய்ப்புக்களாகப் போய்விட்டன. தலைவர்களிடையே நடந்த பலப் பரீட்சைகளிலேயே காலம் விரயமாகிவிட்டது. எதைச் சாக்காகக் கொண்டு பலப் பரீட்சையைத் தொடருவது என்னும்போது ஆர். எஸ். எஸ். வகையாக அகப்பட்டுக் கொண்டது.

ஆர். எஸ். எஸ். என்று பூச்சாண்டி காட்டுவதை வாஜ்பாயி கண்டிக்கும்போதே ஆர். எஸ். எஸ். ஸுக்கும் அறிவுரை வழங்குகிறார். அது ஒரு சமூக, கலாசார ஸ்தாபனம்தான் என்பதையும் அரசியல் நோக்கம் அதற்குச் சிறிதும் இல்லை என்பதையும் அது இன்னும் தெளிவாக நிரூபித்துக் காட்டிச் செயல்படட்டும் என்று கூறுகிறார்.

கடைசியாக, தனி நபர்களின் ஆசைகள், தன்னலங்கள் எல்லாம் இன்று அரசியல்வாதிகளைப் பரிகாசத்துக்குரியவர்களாக்கி விட்டன என்பதைச் சுட்டிக் காட்டி ஆத்ம சோதனை செய்து கொண்டு குற்றங்களைக் களைவோம் என்கிறார்.

வாஜ்பாயி கூறுவது போல் இன்று ஆபத்தில் சிக்கியிருப்பது சில கட்சிகள் அல்லது அதன் தலைவர்கள் அல்ல; தேசம் இந்த இக்கட்டிலிருந்து மீள வேண்டும்.

மீளும்; மறுபடி இங்கு சத்தியமும் நேர்மையும், ஒழுக்கமும், கட்டுப்பாடும் தன்னலமற்ற தியாக மனப்பான்மையும் செழிக்கும்; உழைப்பு உயர்வைத் தரும் என்று நம்பிக்கையுடன் இருப்போம்; இறைவனையும் பிரார்த்திப்போம்.

## பதினாறு வயதினிலே . . .

**ப**தினாறு வயது பருவ மங்கையொருத்தி பரிதாப மரணம் அடைந்த செய்தி பத்திரிகைகளில் வெளியாகியுள்ளது. நெஞ்சை உருக்குகிற அந்தச் செய்தி, அதே நேரத்தில் பாரதப் பெண் குலத்தைப் பற்றிப் பெருமிதப் பூரிப்பும் அடையச் செய்கிறது.

கோவையில் பஸ்ஸில் பயணம் செய்து கொண்டிருந்த ஜெயந்தியின் ஆடைக்குள் ஒரு தேள் புகுந்து ஊர்ந்து காலில் ஏறியிருக்கிறது. தொடையை அடைந்து விட்டது அந்தக் கருந்தேள்! ஏதோ ஊர்வதை உணர்ந்தும் அந்தப் பெண் தன் ஆடையை உயர்த்திப் பார்க்கவோ, தேளைத் தட்டி விடவோ இல்லை. பலர் முன்னிலையில் அவ்வாறு செய்யக் கூச்சப்பட்டுப் பேசாதிருந்து விட்டாள். விளைவு தேள் பலமுறை கொட்டி விட்டது. அப்போதும் வலியைப் பொறுத்துக் கொண்டாளே தவிர எதனால் வலிக்கிறது என்று பார்த்தாள் இல்லை. வீடு திரும்பிய பிறகுதான் ஆடையை அவிழ்த்து உதறி இருக்கிறாள். தேள் கண்டு பிடிக்கப்பட்டது. ஆஸ்பத்திரிக்கு விரைந்தும், பயனில்லை. விஷமேறி ஜெயந்தி இறந்துவிட்டாள். இப்படி ஒரு பெண் ஆபத்துச் சமயத்திலும் காட்சிப் பொருளாக விரும்பாமல் பல்லைக் கடித்துக் கொண்டு வேதனையைச் சகித்துக் கொண்டிருந்ததை அசட்டுத்தனம் என்று சில "நவீன" நோக்குடையவர்கள் கூறலாம்.

ஆனால் பரம்பரை பரம்பரையாக வந்து நமது ரத்தத்தில் ஊறிப் போயிருக்கிற பண்பாடுகளை அவ்வளவு சுலபத்தில் ஒதுக்கி விட முடியாது என்பதைத்தான் இச் சம்பவம் நிரூபிக்கிறது. 'மரணத்தைச் சந்தித்தாலும் சந்திப்பேன் மானம் இழக்க மாட்டேன்' என்று உறுதியோடு இருந்த ஜெயந்தி இந்த நாட்டின் கோடானுகோடி பெண்களின் ஒரு பிரதிநிதி. ஒரு சோறு பதம் என்பது போல்.

இத்தகைய உன்னதமான பெண் குலத்தை இன்றைய திரை உலகும் பத்திரிகை உலகும் விளம்பர வியாபாரிகளும் மற்றும் பல பொது ஜனத் தொடர்பு நிலையங்களும் எப்படியெல்லாம் ஆபாசப் படுத்துகின்றன என்பதைப் பார்க்கும் போது நெஞ்சம் குமுறுகிறது.

நவீன சிந்தனைகளை வரவேற்போம், பெண்களின் சுதந்திரங்களை மதிப்போம், சகல விதமான அம்சங்களிலும் அவர்களுக்குச் சம அந்தஸ்து அளிப்போம் — அவர்களை இழிவு படுத்தாமல் இருக்கக் கற்போம்.

# வாசகர்களுக்கு அதிர்ஷ்டப் பரிசுத்திட்டம்

இந்தப் பக்கத்தில் ஒரு ஜோடி விழிகளையும் ஒரு கவிதையையும் காண்கிறீர்கள்.

இதே போன்று சென்ற வாரமும் பார்த்தீர்கள். மேலும் அடுத்த நான்கு வாரங்களுக்கு ஒரு ஜதை விழிகளையும் ஒரு கவிதையையும் பிரசுரிக்கவிருக்கிறோம். ஒவ்வொரு வாரமும் வெவ்வேறு நட்சத்திரத்தின் கண்கள்; வெவ்வேறு கவிஞருடைய கவிதை.

ஆனால் ஒவ்வொரு வாரமும் விழிகளும் கவிதைகளும் பொருத்தம் பார்த்துப் பிரசுரிக்கப்படவில்லை. மாறிப் போயிருக்கின்றன.

ஆறு ஜோடி விழிகளையும் ஆறு கவிதைகளையும் கவனித்து யோசித்துப் பொருத்தம் பார்த்து நீங்கள் இணை சேர்க்க வேண்டும். ஆறுவது வாரத்தில் —செப்டம்பர் 9ந் தேதி இதழில் — இடம்பெறவிருக்கும் கூப்பனில் உங்கள் முடிவை, கவிஞர் பெயரையும் எதிரே நட்சத்திரத்தின் பெயரையும் எழுதுவதன் மூலம் தெரியப்படுத்த வேண்டும். தனித் தாளில் எழுதி அனுப்பப்படும் விடைகள் நிராகரிக்கப்படும்.

ரயில் ராதிகா இந்த ஆறு கவிதைகளையும் பொருத்தம் பார்த்து இணை சேர்த்து ஆறு ஜதைக் கண்களையும் எங்களிடம் ஒரு விடை தந்திருக்கிறார். அந்த விடை எந்த வாசகருடைய விடையுடன் ஒத்துப் போகிறதோ அவருக்கே முதல் பரிசு. இரண்டாவது மூன்றாவது பரிசுகளும் ஆறுதல் பரிசுகளும் உண்டு.

பரிசு விவரம்:

**முதல் பரிசு: பிரஸ்டீஜ் பிரஷர் குக்கர்**
**2–ம் பரிசு: விஐபி ப்ரீஃப் கேஸ்**
**3–ம் பரிசு: அலாரம் கடிகாரம்**
**ஆறுதல் பரிசுகளாக 200 கல்கி தீபாவளி மலர்கள்.**

ஒன்றுக்கு மேற்பட்ட சரியான விடைகள் வந்தால் பரிசுப் பொருள்களின் மதிப்பைக் கணக்கிட்டு அத் தொகை பகிர்ந்தளிக்கப்படும்.

200க்கு அதிகமான ஆறுதல் பரிசுகள் தரவேண்டிய நிலை ஏற்பட்டால் சீட்டுக் குலுக்கல் முறையில் இருநூறு பேர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள்.

**முடிவு தேதி செப்டம்பர் 15**

உறையின்மேல் 'அதிர்ஷ்டப் பரிசுத் திட்டம்' என்று குறிப்பிட்டு, ஆசிரியர் கல்கி சென்னை-32 என்ற விலாசத்துக்கு அனுப்பவும்.

வேறு கடிதப் போக்கு வரத்துக் கிடையாது.

சந்தேகம் எழும் விஷயங்களில் ஆசிரியரின் தீர்மானமே முடிவானது.

## இந்த வாரக் கண்கள் :–

ஸ்ரீதேவி





இந்த வாரக் கவிதை:

கடைக்கண் காரிகையர் காட்டிவிட்டால்
மண்ணில் குமரருக்கு மாமலையும் ஓர் கடுகு.

— பாரதியார்

# புறத்தில் மலர்ந்த மலர்

லட்சுமிராஜரத்னம்

சேரமான் கணைக்கால் இரும்பொறையின் மாபெரும் படை தோல்வியுற்று விட்டது. மாமன்னர் சேரமானின் மகுடம் மண்ணில் சாய்ந்து விட்டது. சேரர் படை சின்னா பின்னமாகியது. சேர மன்னனைச் சோழ மன்னன் கோச்செங்கண்ணான் சிறைப் படுத்தி விட்டான். யானைப் படைகளுக்குப் பெயர் பெற்ற சேரர் படை புறமுதுகிட்டது. சோழனின் யானைகள் இரத்தம் போர்த்த செந்தூரக் குவியல்களாக வெற்றி நடை போட்டு வந்தன.

கழுமலம் என்ற இடத்தில் சேர மன்னன் கணைக்கால் இரும்பொறைக்கும் சோழ மன்னன் கோச்செங்கண்ணானுக்கும் நடந்த போரில் சேரன் முடியை இழந்து கைதாகி விட்டான்!

சிறைக்குச் சென்ற சேர மன்னனின் கண்களில் கண்ணீர் வடியவில்லை. இரத்தம் வடிந்தது. சேரக் குடிமக்கள் இதைக் கேட்டு எப்படித் துடிப்பார்கள்? ஏன் அவனுடைய தேவி சேரமா ராணி?

சேரமா தேவிதான் இந்தப் போருக்குக் காரணம் என்பதைச் சேர மன்னன் எப்படி அறிவான்? சுந்தரவல்லி சேரமா தேவியாக ஆவதற்கு முன்பு...

சேர நாட்டின் மாதண்ட நாயகரின் மகளாக – சுந்தரவல்லியாக இருந்த பொற்சிலையைப் பற்றிக் கேள்விப்பட்டான் சோழன் செங்கண்ணான். அவளது அழகைப் பற்றிக் கேள்விப்பட்டதனால் மனத்தை அடக்க முடியவில்லை. மாறு வேடத்தில் சேர நாட்டில் தங்கிச் சுந்தரவல்லியின் தோற்றப் பொலிவைக் கண்டான். அது சுந்தரவல்லி நந்தவனத்தில் தனித்திருந்த சமயம்.

''இது பெண்களின் உல்லாச நந்தவனம். இங்கு ஆண்கள் வரக்கூடாது. தாங்கள் வழி தவறி வந்துவிட்டீர்கள். தாங்கள் யார் என்பதை நான் அறியலாமா?'' என்று கேட்டாள் சுந்தரவல்லி.

''சரியான வழியில்தான் வந்திருக்கிறேன். பல காதங்களைக் கடந்து ஓடோடி வந்திருக்கிறேன். இந்தச் சுந்தரியின் சௌந்தர்ய வ்டிவைக் காண ஓடோடி வந்து விட்டேன்.''

அவள் விழித்துப் பார்த்தாள். ''தாங்கள் பல காதங்கள் கடந்து வந்திருக்கலாம். ஆனால் தாங்கள் யாரென்று கூறவில்லையே?''

''நான் சோழ அரசன் செங்கண்ணான்.''

அவள் நம்ப முடியாமல் பார்த்தாள்.

''என்ன விளையாடுகிறீர்களா?'' அவள் சினந்தாள். அவன் தன் முத்திரை மோதிரத்தை – சோழ இலச்சினையைக் காட்டினான். ''இப்பொழுது நம்புகிறாயா சுந்தரி?''



''ஓ! சோழ மன்னரே! இதென்ன சோதனை? எனது தந்தையாரிடம் போய்த் தங்கள் வருகையை அறிவிக்கிறேன். எனது மடமையான விசாரணையைத் தாங்கள் பொறுத்தருள வேண்டும்.''

சுந்தரவல்லி தலையைக் குனிந்து நின்று அங்கிருந்து அகலத் துடித்தாள்.

''சுந்தரவல்லி, உன் அழகைக் கேள்விப் பட்டு உன்னைக் காண வந்தேன். அழகும் ஆற்றலும் அறிவும் சோழநாட்டுக்குச் சொந்தமாக வேண்டும்.''

சுந்தரவல்லி அப்படியே ஆடிப்போனாள். ''மாமன்னரே! இதென்ன சோதனை? தங்கள் நாட்டில் இல்லாத பெண்களா? என்னைவிட அழகிலும் ஆற்றலிலும் அறிவிலும் மேம்பட்டவர்கள் எத்தனையோ பேர்கள் இருப்பார்கள் அரசே! என்னைப் போய்ச் சோதனை செய்வது நியாயமில்லை. தாங்கள் என்னை மன்னிக்க வேண்டும். தங்கள் ஆசைக்கும் அன்புக்கும் இந்தப் பேதை அருகதையற்றவளாக இருக்கிறேன்'' என்றாள் சுந்தரவல்லி பணிவான குரலில். சேர மன்னன் மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்தான். அவள் தொடர்ந்தாள். ''இந்த ஏழையின் உள்ளம் என்றோ சேர மன்னர்பால் சரணடைந்து விட்டது. விரைவில் தங்களுக்கு என் மண ஓலை வரும் அரசே!''

''நீ உன் முடிவை மாற்றிக் கொள்ள மாட்டாயா?''

அவள் தலையை அசைத்தாள். ''முடியாது அரசே முடியாது. தாங்கள் இப்படிக் கேட்பது விந்தையாக — ஏன், நகைப்புக் குரியதாக இருக்கிறது. இந்தியப் பெண் தன் கணவனை வரித்துவிட்ட பின்பு தன் வார்த்தையில் பிறழ்வதுண்டா? நான் தங்களை அன்னியராக நினைக்கவில்லை. என்னை ஆசீர்வதியுங்கள் அரசே!''

சீறிச் சினந்தான் செங்கண்ணன். எத்தனை ஆசைகளைச் சுமந்து கொண்டு வந்தான்? தனக்கும் தன் அரசுக்கும் அடிபணியாதவர்கள் உண்டா என்ற இறுமாப்பில் வந்தானே என்ன ஆயிற்று? கண்கள் சிவந்தன. தோள்கள் புடைத்தன. தொண்டையிலிருந்து அகங்காரமான தொனி எழுந்தது.

''இதுதானா உன் முடிவு?''

''ஆமாம், அரசே!''

''உன் மன்னவன் சேரமானைச் சிறை எடுத்து உன் வாழ்வைக் குலைக்கவில்லை என்றால் நான் சோழன் கோச் செங்கண்ணன் இல்லை. என்ன செய்கிறேன், பார்!''

சில ஆண்டுகள் பொறுத்திருந்து திட்டம்





# ஸ்கைலாப்

## வட்டமேஜை—

● ''இனி பானு உறங்கட்டும்'' சிறுகதையில் 'Love is immortal' என்பதற்குப் பதிலாக Love is immoral என்று வருகிறது. இதைப் படித்ததும் என் தலையில் ஸ்கைலாப் விழுந்தது போலிருந்தது. இனியேனும் இது மாதிரி அசம்பாவிதம் நடவாமல் பார்த்துக் கொள்ளும்!

சென்னை—1 தமிழ்செழியன்

● ''தியாக வல்லபன்'' என்னும் சிறந்த தொடர்கதை எழுதிய விக்கிரமன், ஆண்டு மலருக்கு முன் முடித்து விடுகிறேன் என்று தங்களுக்குக் கொடுத்த வாக்குறுதியால் தம் தொடர்கதையை அவசரம் அவசரமாக முடித்தாற்போல் உள்ளது. அவரை ஏன் தியாக வல்லபன் புகழ் தியாக விக்கிரமன் என்று அழைக்கக் கூடாது? ஓவியங்கள் நன்றாகவே இருந்தன.

கோவை கே. ராஜகோபால்

● திரு விக்கிரமன் எழுதிய 'தியாக வல்லபன்' தொடர் கதை — சோழர்களின் தியாக வரலாற்றுக்கு மற்றுமொரு சான்று! சந்திரப்ரபா -- வல்லபனின் புனிதக் காதல் — தமிழரின் தூய காதல் வாழ்க்கைக்கு ஒரு வெற்றி! தமிழரின் பழம் பெரும் பண்பாட்டை இது போன்ற கதைகளில் தானே காண முடிகிறது!

பாதூர் ஆர். இந்திரா

● தியாக உள்ளமும், தூய காதலும் ஒரு சேர அமையப்பெற்ற தியாக வல்லபனைப் பாதுகாக்கப்பட வேண்டிய அருமையான நாவலாக திரு விக்கிரமன் படைத்திருந்தார். மணியம் செல்வனின் ஓவியங்கள் நாவலுக்கு மேலும் அழகு சேர்த்தன.

போடிநாயக்கனூர் எஸ். சையது முகமது

● கல்கி — ஜாய்டாய் நிறுவனங்கள் இணைந்து நடத்திய குழந்தைகளுக்கான போட்டியில் முதல், இரண்டாவது மூன்றாவது பரிசுகளைப் பெற்ற கல்யாணி, ஆனந்தி, கண்ணன் ஆகியோருக்குத் தலா ரூ. 11 கோவை லயன்ஸ் கிளப் பரிசளிக்கிறது. பரிசுக் காசோலைகள் இத்துடன் அனுப்பப்பட்டுள்ளன.

லயன் பி. ஸ்ரீனிவாசன், காரியதரிசி

(காசோலைகள் குழந்தைகளுக்கு அனுப்பப் பட்டுவிட்டன. கோவை லயன்ஸ் கிளப்புக்கு நன்றி. ஆசிரியர்)

● கிரிக்கெட் கற்கலாம் பகுதி மூலம் ''கோச்'' செய்த திரு கே. சந்திரசேகர் அவர்களுக்கும் தயாரித்த குண்டுமணி அவர்

---

திட்டி, படை திரட்டிச்சென்று வெற்றியும் பெற்று விட்டான்.

''சேரமாதேவி! அன்று என் மனம் என்ன பாடுபட்டது? நினைத்ததை அடைந்தே திருவான் இந்தச் சோழ மன்னன். என் வாழ்வில் தோல்வியைத் தழுவ வைத்தாய். இன்று அழு, கண்ணீர் சிந்து! கதறிக் கதறி அழுது மனத்தை உடைத்துக்கொள்.''

இரவு மெல்லப் படர்ந்து வந்தது. நகரின் வெற்றிக் கோலாகலங்கள் இருளை உள்ளே விடாமல் தீப ஒளிகளால் விரட்டி விட்டன. இருளரக்கன் சேர நாட்டின் அரண்மனையை நோக்கித் தோல்வியை எடுத்துக் கொண்டு ஓடினான்.

குடவாயிற் கோட்டத்தில் சிறை வைக்கப்பட்ட இரும்பொறையின் நெஞ்சத் துயர் சொல்லில் வடித்து மாளாது. தன் நெஞ்சே வெடித்து விடும்போல நினைத்து நினைத்து வெந்தான்.

நிலா முற்றத்தில் ராணி அருகே அமர்ந்து பால் அன்னம் உண்டது கூடக் கனவாகத் தோன்றியது. நினைத்து நினைத்து நா வறண்டது. பழரசம் தரத் தன் தேவி சுந்தரவல்லி அருகில் இல்லையே! ஒரு வாய் தண்ணீராவது கிடைக்குமா? காவலர்கள் பக்கம் திரும்பி 'தண்ணீர், தண்ணீர்' என்று நலிவுற்ற குரலில் கேட்டான். காவலர்களின் அலட்சிய நோக்கும் ஏளனச் சிரிப்பும் அவனது பஞ்சடைந்த கண்களில் மங்கிய சித்திரமாகப் பதிந்தன. அப்படியே மயங்கிச் சாய்ந்தான்.

புலவர் பொய்கையார் வந்திருப்பதை ஒரு காவலன் வந்து தெரிவித்தான்.

''ஓ.... புலவர் பொய்கையாரா? உடனே அழைத்து வா.'' சோழ மன்னனின் நெஞ்சில் வெற்றியின் இறுமாப்பு இறுகிற்று. பொய்கையார் சேர மன்னனின் சிறந்த நண்பராயிற்றே? ஒருவேளை சேர மன்னனை விடுதலை செய்ய வேண்டுகோள் விடுக்க வருகிறாரோ?

''வருக, வருக, புலவர் பெருமகனாரே! உம் வரவால் இந்த அரசவை பெரும் பேறு பெற்றது'' என்று சோழ மன்னன் புலவரை வரவேற்றான். நாட்கள் சில கடந்தும், போரில் வெற்றி பெற்றும் சோழன் சேர மன்னனைக் கைதி நிலையிலேயே அடைத்து வை இருப்பதை உணர்ந்தவே புலவர் பொய்

# தலையில் விழுந்தாற் போல...!

களுக்கும் அழகுறப் படம் வரைந்த இரு ராமு அவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றி. குழந்தைகளுக்குப் பயன்படும் அளவில் பைண்ட் செய்துவிட்டேன்.

ஈரோடு-10 மேஜர்தாசன்

● 'ஓரம்போ–1 (தலையங்கம்)ல் அகில இந்தியா ரேடியோவின் 'ஓரம்போய்' வக்காலத்து வாங்கிய நீங்கள் ஓரம்போ–2ல் சுயநல அரசியல்வாதிகளின் ஓரம் போய் வக்காலத்து வாங்காமல் நல்லதோர் கருத்தினை வெளியிட்டதால்.... அரை மனத்துடன் உங்களைப் பாராட்ட வேண்டியிருக்கிறது.

திருச்சி-20 கிரிஜா மணாளன்

● ஓரம்போ! 1–2 தலையங்கம் Superb: 'அதோ என் வீட்டுக் கூரை மேல் தீப்பந்தத்துடன் வீட்டுக்குத் தீவைக்க உட்கார்ந்திருக்கிறானே அவன்தான் என் பிள்ளைகள் நால்வரிலும் அதிக யோக்கியன்' என்று சொன்ன கதையாக இருக்கிறது இந்தத் தலைவர்கள்(?) கொண்டுள்ள பதவிப் பித்து.

தஞ்சை-7 காந்தி ஆசிரமம் கிருஷ்ணன்

● திரு டூ. என். ஆர். ராவ் அவர்களுடன் காணப்பட்ட பேட்டி ரியலி ஃபென்டாஸ்டிக். அதுவும் தேசாயின் ஆட்சி கவிழ்ந்த இக்கட்டான நிலையில், அரசியல் சாசன நிபுணரைப் பேட்டி கண்ட கல்கிக்கு ஒரு ஷொட்டு. 'அரசியல் சாசனத்தைப் பற்றி நான் பேசத் தயார். அரசியல் பேச நான் விரும்பவில்லை, என்ற அவரின் வரிகள் - தம் தொழிலுக்கு அவர் தரும் மதிப்பைக் காட்டுகிறது.

சென்னை-43 சுதாகர்

● அ. இ. தமிழ் எழுத்தாளர் மாநாடு தந்த அவலை நன்றாக மென்றிருக்கிறார் திரு இ. ராஜேந்திரன்.

வேறுபட்ட கருத்துடையோர் ஆயினும் அனைவரும் ஒரே சங்கத்தில் இணைந்து தத்தம் உரிமைகளுக்காகப் பாடுபடலாமே என்பதுதான் அவரது கட்டுரையின் மையக் கருத்து என்பது நன்றாகப் புரிகிறது. கட்டுரையின் கடைசிப் பத்தி இதனை அங்கதச் சுவையோடு ஆசகமாக உணர்த்துகிறது.

சென்னை புத்தனேரி சுப்பிரமணியம்,
இணைச்செயலாளர்
அ.இ. தமிழ்எழுத்தாளர் சங்கம்

● ''பெண் எழுத்தாளர் சங்கம்'' என்று நகைச்சுவைக் கட்டுரை எழுதிய உம்மை நகைச்சுவை எழுத்தாளர்கள் சங்கம் ஒன்று ஏற்படுத்தித் தலைவராக்கிவிடலாம் என்று எண்ணுகிறேன்!

பங்களூர் ப. மூர்த்தி

● 'வட்டமேஜை' பகுதியில் 'குற்றாலத்தை மறக்கலாமா?' என்று தலைப்பு வரைவதற்குப் பதில் 'குற்றாலத்தை மறக்கலமா' என்று தங்கள் ஓவியர் 'ல'வுக்குக் கால் வாங்க மறக்கலாமா?

குரோம்பேட்டை வேதா

---

கையார் அங்கு வந்திருந்தார். நட்புக்கு இலக்கணமாகத் தாம் சேர மன்னனை எப்பாடு பட்டேனும் விடுவிக்க வேண்டும் என்ற எண்ணத்தில்தான் அவர் துணிந்து சோழனின் அரசவையினுள் நுழைந்திருந்தார்.

''புலவரே, அடியேன் தங்களுக்கு ஏதேனும் செய்ய வேண்டியது உளதா?''

புலவர் பூவாகச் சிரித்தார். கற்றறிந்தோர் காலத்தை வென்ற சிரிப்பு அது. அதில் அடக்கமும், அமைதியும் நிறைந்து பொங்கின.

''இனிப்பை நாடி ஓடும் ஈக்களும், பழுத்த மரத்தைத் தேடி வரும் புள்களும் போல் மன்னன் அரசவையை நாடி வரும் புலவர்கள் காரியம் இல்லாது வருவார்களா? மன்னன்! நின் வெற்றியை, நின் போரின் சிறப்பை 'களவழி நாற்பது' என்ற நூலாக இயற்றியுள்ளேன். இசைவு தந்தால் நின் பெருமையை இத்திருச்சபை அறியக் கூறும் ஒரு வாய்ப்பு எனக்குக் கிடைக்கும்.''

''அப்படியே ஆகட்டும் புலவரே! தாங்கள் இப்பொழுதே – இத்திருச் சபை கூடியுள்ள தருணத்தில் ஆரம்பிக்கலாமே! தமிழ்த் தாகம் எடுத்தவனுக்கு வேறு தாகம் ஏது புலவரே? நல்லது செய்ய நேரம் காலம் பார்க்க வேண்டாம்.''

புலவர் பாட ஆரம்பித்தார். மன்னனின் முகம் சந்திர ஒளியாகத் திகழ்ந்தது. சோழ மன்னனையும், அவனுடைய நாட்டு வளப்பத்தையும், அவன் பெற்ற வெற்றியையும் சிறப்பித்து அமைந்த பாடல்கள் வரிசை பெற்றன. சேரனின் யானைப் படையைத் தாக்கி எதிர்த்து வெற்றி பெற்ற தன் யானைப் படையைச் சிறப்பித்துப் பாடியதைக் கேட்ட மன்னனின் முகம் சற்று கர்வத்தால் விகசித்தது.

'இதைச் சேரமா தேவி கேட்டிருக்க வேண்டும்' என்று எண்ணினான். வெற்றி வெறி நெஞ்சில் கனத்தது. 'என்னை அன்று உதறினாயே, இன்று உன் மணாளன் கதியைப் பார். நீ அடையப் போகும் கதியைப் பார்.'

மன்னன் அருகே ஒரு வீரன் வந்து நின்றான். அருகில் நெருங்கி விஷயத்தைச் சொன்னான்: ''அரசே, நாங்கள் செல்லும் முன்பே சேரமாதேவி நெருப்பில் விழுந்து பிராணத் தியாகம் செய்து கொண்டார்.'' அரசனின் முகம் இறுகியது. பொய்கையார் பாடலை நிறுத்தினார். ''நீர் தொடர

லாம்'' என்றான் மன்னன். மனத்தினுள் ஆயிரம் சுழற்சிகள். 'ஓ! என்னை இதிலும் ஏமாற்றி விட்டாள். சண்டாளி!' பற்களைக் கடித்துக் கொண்டான்.

மயங்கி விழுந்த சேர மன்னன் கண்களைத் திறந்து நோக்கினான். அப்பொழுதுதான் தாம் இருப்பது சிறை என்ற உணர்வு வந்தது. மேல் உத்தரியத்தால் மேனியைத் துடைத்துக் கொண்டான். சந்தனமும், சவ்வாதும் மணத்தமேனியில் புழுதி படிந்திருந்தது.

மங்கிய வெளிச்சம் சிறிது படர்ந்து கிடந்தது. இருளைக் கண்கள் துழாவியது. சுற்றிச் சுற்றிப் பார்த்தான் சேர மன்னன். ஒரு குவளை நீர் தர அங்கு எவருமில்லை. அவ்வளவு அலட்சியம்! அவனுடைய மயக்கத்தைப் பொருட்படுத்தியவரும் இல்லை.

சிந்தித்தான். 'ஒரு மன்னனுக்குப் பொன், பொருள், போக வாழ்வை விட மானம் மேலான பொருள் அல்லவா? மன்னர்களின் குலமுறை வாழ்வை நினைவுகூர்ந்தான்.

அருகே கிடந்தது ஓர் ஓலை நறுக்கு. அதை எடுத்தான் சேர மன்னன். ஒரு வாய் தண்ணீர் தராதவனிடம் எழுத்தாணியா கேட்க முடியும்? கால் கட்டை விரல் நகத்தை முடிந்த அளவு பெரிதாகப் பிய்த்தான். நெஞ்சில் வழியும் உதிரமும், இரணமும் தராத வலியையா இந்தக் கட்டை விரல் தந்துவிடப் போகிறது? ஓலையில் எழுதினான்.

அவன் எதிரே ஒரு குவளை நீரைக் காவலன் கொண்டு வைத்தான். 'ஓ...காலந்தாழ்த்தி வந்த தண்ணீர். ஆபத்துக்கு உதவாத தண்ணீர்.' சேர மன்னன் அந்தக் குவளை நீரைத் தூக்கித் தூர ஊற்றினான். காவலன் ஏளனமாகச் சேர மன்னனுக்குப் பைத்தியம் என்று எண்ணிக் கொண்டே போனான்.

'களவழி நாற்பதை'யும் கூறி முடித்தார் பொய்கையார். எப்படியாவது சேர மன்னனைச் சிறை விடுவிக்க வேண்டும் என்ற தாளாத ஆத்திரம் அவருக்கு.




பெலட்டை:

## இன்னல்கள் தீர்க்கும் புன்னகை

குமாரி ஸ்ரீகலாவை அவள் வீட்டு மொட்டை மாடியில் நான் படம் எடுத்தபோது காற்று பலமாக சுழன்று வீசத் தொடங்கியது. புடவையைச் சரி செய்து கொண்டவாறே ''நானே பறந்து போய் விடுவேன் போலிருக்கு. சீக்கிரம் எடுங்கள்!'' என்றாள். காற்று என்ன, புயலே அடித்தாலும் ஸ்ரீகலாவின் இந்தப் புன்னகை மாறாது என்று நினைத்துக் கொண்டே காமிராவைக் கிளிக் செய்தேன்.

வண்ணப்படம் எடுத்தவர்: உத்ர:

''புலவரே! சோழ நாட்டின் வெற்றியை மிகவும் அழகு பெற உவமை அணிகளை அமைத்துச் சிறப்புறப் பாடினீர்கள். இன்று இங்கே அரசவை விருந்தை ஏற்று, பரிசில்களைப் பெற்றுச்செல்ல வேண்டும் என்று வேண்டுகிறேன்.''

புலவரின் தீர்க்கமான கண்கள் ஒளிர்ந்தன. ''அரசே!'' என்று கம்பீரமாக அழைத்தார்.

''என்ன பொய்கையாரே, தங்களுக்கு என்ன தேவையோ கேட்டுப் பெறலாமே?''

''எம் போன்ற புலவர்களுக்கு என்ன தேவை மன்னா? நாட்டின் நல்லுறவும், மக்களின் நலமும்தானே? நீ பெற்ற வெற்றியின் சிறப்பை நான் வியந்து பாடினேன். உலகம் உள்ளளவும் உயர்ந்து நிற்கும். ஆனால் நீ செய்வதற்கும் ஒன்று உண்டு. நீ வெற்றி பெற்ற சேர நாட்டைச் சேர மன்னனுக்கு மீண்டும் அளிப்பதுதான் உனக்குச் சிறப்பைத் தரும் செயல்.''

மன்னன் பொய்கையாரைத் தழுவிக் கொண்டான். ''உம் விருப்பப்படியே ஆகட்டும் புலவரே! நம்முடன் விருந்து உண்ணவே சேர மன்னரை அழைத்து வரலாம். யாரங்கே! சேர மன்னனின் விடுதலையை அறிவிக்கலாம்.''

''மன்னா, உம் நெஞ்சம், நீ சேர மன்னனை வெற்றி பெற்று நாட்டைக் கவர்ந்தபோது அனுபவித்த ஆனந்தத்தை விட இப்பொழுது அதிக ஆனந்தத்தை அடைகிறதல்லவா?''

''ஆம் புலவரே! உண்மையை மறைக்க முடியாது. கொடுப்பதுதான் சிறப்பு என்ற கொடை மரபில் வந்தவன் நான்.''

மன்னனும் பொய்கையாரும் சிறைச் சாலையினுள் நுழைந்தனர். அங்கே அமைதி தவழ்ந்தது.

சோழமன்னனுக்கு முன்னால் பாய்ந்து சென்றார் பொய்கையார். ''சேர மன்னா, இங்கே பார்! உன் நண்பன் பொய்கையார் வந்திருக்கிறேன்.''

சாய்ந்து கிடந்த சேர மன்னனின் உடலைப் புரட்டினார் புலவர். மானத்தையே பெரிதாக நினைத்துச் சேர மன்னன் ஒரு வாய்த் தண்ணீர் கூடப் பருகாமல் தன் உயிரைக் கூட்டிலிருந்து எடுத்தெறிந்து விட்டான். சுற்றிலும் பார்த்தார் புலவர். சேரனின் அருகே ஓர் ஓலை நறுக்கு. அதனருகே கால் நகம். புரிந்து கொண்டார் புலவர். நெஞ்சில் இரத்தம் கசிந்தது.

''நான் உன்னைக் காப்பாற்ற வரும் முன்பு மானத்தைக் காத்துக் கொண்டாய் மன்னா!'' என்றவர், சோழனின் பக்கம் திரும்பி, ''புறத்திற்காக ஒரு மலர் இந்த ஓலை நறுக்கில் மலர்ந்து விட்டது'' என்று புலம்பினார்.

''புலவரே! சேர மன்னன் என்னை வென்று விட்டான்'' என்று இடி குரலில் சோழன் கூறியதும் அந்தச் சிறைச் சாலையே ஒரு கணம் நடுங்குவது போல இருந்தது. வீரமும் ஆற்றலும் பிரகாசித்த அவனது இரு விழிகளும் காவிரியைக் கண்களில் கொண்டது போல் ஊற்றாகப் பொங்கின. 'சேரன் மட்டுமல்ல, சேரன்மாதேவியும் வென்று விட்டாள்' என்று அவன் உள்ளம் ஓலமிட்டது.

# Drug Addiction

## எங்கே போகிறோம்?



**(சென்னை மருத்துவக் கல்லூரி உதவி முதல்வரும் சென்னை பொது மருத்துவ மனையின் மருந்து வேதியல் துறை (Pharmocology) பேராசிரியருமான திருமதி டாக்டர் லலிதா காமேஸ்வரன் M. B. B. S. Ph. D. London FCAI அவர்களிடம் சில கேள்விகள் கேட்ட போது அவர் அளித்த பதில்கள்)**

கேள்வி: சமீப காலத்தில் மருந்தடிமைப் பழக்கம் (Drug Addiction) நமது சமுதாயத்தில் பரவி, தனி மனிதனுக்கும், சமுதாயத்திற்கும் ஏராளமான தீமையான விளைவுகளைத் தோற்றுவித்து மக்களிடையே ஒரு வித அச்சத்தை விளைவித்து வருகிறதே இதற்கு அடிப்படைக் காரணமாக எவற்றைக் கருதுகிறீர்கள்?

டாக்டர் லலிதா காமேஸ்வரன்: மருந்தடிமைப் பழக்கம் என்பது சமீப காலத்தில் தான் தோன்றியது என்பது சரியாகாது. அப்பழக்கம் காலம் காலமாகப் பலவித மாறுபட்ட ரூபங்களில் இருந்துதான் வந்துள்ளது. இயற்கையில் விளையும் போதை மருந்துகளை மக்களில் ஒரு சாரார் தங்களது கவலைகளையும் துயரங்களையும் மறக்கச் செய்வதற்காக உபயோகித்து வந்துள்ளனர். ஆனால் இயற்கைப் போதை மருந்துகளுடன் ரசாயன ரீதியாகத் தயாராகும் (Synthetic Drugs) மருந்துகளும் உபயோகப்படுத்தப்படுவதால் மருந்தடிமைப் பழக்கம் முன்பை விட அதிக அளவில் பரவியுள்ளதாகத் தோன்றுகிறது. மூளை சம்பந்தப்பட்ட சில வியாதிகளுக்காக ரசாயன ரீதியாகத் தயாரிக்கப்படும் மருந்து வகைகளை மக்கள் போதைக்காகத் தவறாகப் பயன்படுத்துவதால்தான் இத்தீமை பரவுகிறது.

கேள்வி: மருந்தடிமைப் பழக்கம் தற்போது இளைய சமூகத்தினரிடையே, குறிப்பாக கல்லூரி மாணவ மாணவியரிடையே தான் அதிகமாகப் பரவிக்கிடப்பதாக அறிகிறோமே, இது எதனால்?

லலிதா: இளைய சமுதாயத்தினரி டையேதான் அதிகமாகப் பரவியுள்ளது என்று தீர்மானமாகச் சொல்லிவிட முடியாது. ஆனால் ஒன்று. பண்டைய காலத்தில் தற்போது உள்ளது போன்று இளைய சமுதாயத்தினருக்குக் கவலைகளும், ஏமாற்றங்களும், வாழ்க்கையில் விரக்தி உண்டாக்கக்கூடிய அம்சங்களும் அதிகம் இல்லை. தற்போதைய சமுதாயத்தில் மலிந்து வரும் வேலையில்லாத் திண்டாட்டம், சமுதாயப் பாதுகாப்பின்மை, குடும்பத்தில் நிலவும் அமைதியின்மை போன்ற பல அம்சங்கள் இளைய சமுதாயத்தினரும் இத்தகைய மருந்துகளை நாடிப் போகத் தூண்டுதலாக உள்ளன. இத்தகைய போதை மருந்துகளை உட்கொண்டு தாற்

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

உலகத்திலேயே நீளமான ரேடியோ நாடகம் ரஷ்ய வானொலியில் ஒலிபரப்பானது தான். இந்த நாற்பது மணிநேர நாடகம், 64 பாகங்களாக, இரண்டரை வருஷங்களுக்கு ஒலிபரப்பாயிற்று. நாடகம் மிகைல் ஷோலோகோவ் எழுதியது தலைப்பு: 'கொயட் ஃப்ளோஸ் த டான்'.

இந்நாடகத்தின் சிறப்பு : நடிகர் மிகைல் உல்யனுவ் ஒருவரே முழு நாடகத்தையும் நடித்து, வசனம் பேசியிருக்கிறார். மொத்தம் 338 கதாபாத்திரங்கள் இடம் பெறும் இந்நாடகத்தில் வெவ்வேறு தொனியில் ஒரே குரல்! அது உல்யனுவுடையது.

—ப்ராவ்தா

—முத்து

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆



இரண்டு குச்சிகளை நகர்த்தி ஒன்றை ஒன்று தொட்டுக் கொண்டிருக்கும் நான்கு சதுரங்களாகச் செய்ய வேண்டும்.

விடை 32 பக்கம் பார்க்க.

— பாலசந்திரன்

---

தாற்காலிகமாகத் தம்மை மறந்திருப்பதால் எவ்விதப் பிரச்னையும் தீர்ந்துவிடப் போவதில்லை. மாறாக உடல் நிலை கெடக்கூடிய புதிய பிரச்னைதான் உண்டாகும் என்பதை இந்த மருந்துகளை உபயோகிப்பவர்கள் உணர வேண்டும்.

**கேள்வி:** போதை மருந்துகளுக்கு அடிமையாகி விட்டால் அவர்களைப் பழைய நிலைக்கு மீட்கவே முடியாது என்று கூறப்படுவது உண்மைதானா?

**லலிதா:** மருந்தடிமைப் பழக்கத்துக்கு ஆளாகிவிட்டால் அதனின்று விடுபட முடியாது என்பது சரியில்லை. ஆனால் அது மிகவும் கடினமான செயல்.

மருந்தடிமைப் பழக்கத்துக்கு ஆளானவர்களை ஏதோ குற்றவாளிகள் போன்று வெறுத்து ஒதுக்கிவிடும் மனப்பான்மை தற்போது நமது சமுதாயத்தில் காணப்படுகிறது. பெற்றோர்களேகூட தங்களது மகன் அல்லது மகளை ஏதோ ஓர் ஒதுக்கத்தக்க நபராக நடத்து வதை நான் கண்டுள்ளேன். இப்போக்கு மிக மிகத் தவறானதாகும்.

மருந்தடிமைப் பழக்கத்துக்கு ஆளானவர்களை அரவணைத்துச் சென்று, அனுதாபம் காட்டி, அவர்கள் இப்பழக்கத்தை மேற்கொண்டதற்கான அடிப்படைக் காரணத்தை மனோ தத்துவ ரீதியாக ஆராய்ந்து அதனை நிவர்த்தி செய்ய அவர்களுக்கு உதவுவதன் மூலம் அவர்களது மனத்தில் ஒரு பாதுகாப்பு மனப்பான்மையை வரவழைக்கச் செய்து அவர்களை இப்பழக்கத்தினின்று மீட்டுவிடலாம். இத்தகைய சிகிச்சை அளிப்பதற்காக மனோதத்துவ நிபுணர்கள் மேற்பார்வையில், சுலபமாக எவரும் அணுகக் கூடிய வகையில் சமூக நல வசதி நிலையங்கள் நிறுவப்பட வேண்டும். இத்தகைய நிலையங்கள் மனநோய் மருத்துவ மனைக்கு (Mental Hospital) த் தங்கள் குழந்தைகளை அனுப்பக் கூச்சப்படும் பெற்றோர்களால் ஏற்றுக் கொள்ளத் தக்கதாக இருக்கும்.

**கேள்வி:** அகில இந்திய ரீதியாக எடுத்துக்கொண்டால் கல்லூரி மாணவ, மாணவியரிடையேதான் மருந்தடிமை பழக்கம் மலிந்துள்ளதாகவும், சென்னை கல்லூரி மாணவ, மாணவியரிடையே கூட இப்பழக்கம் கவலையளிக்கும் அளவுக்குப் பரவியுள்ளதாகவும் சமீபத்தில் ஓர் ஆங்கிலப் பத்திரிகையில் புள்ளி விவரங்கள் வெளியிட்டு இருந்தனர். இந்நிலை உண்மைதானா?

**லலிதா:** இது மிகைப்படுத்தப்பட்ட செய்தி. சென்னையில் எந்தெந்தக் கல்லூரிகளில் இத்தகைய மருந்தடிமைப் பழக்கம் அதிகமாக உள்ளதாகக் கருதப்பட்டதோ அத்தகைய கல்லூரிகளை முக்கிய நிலைக்களன்களாகக் கொண்டு, சென்னை கல்லூரி மாணவ மாணவிகளிடையே மருந்தடிமைப் பழக்கம் எந்த அளவுக்குப் பரவியுள்ளது என்று சமீபத்தில் ஒரு புள்ளி விவரம் தயாரிக்கப்பட்டது. அப்படி யொன்றும் பெருத்த அளவுக்கு நமது கல்லூரி மாணவ மாணவியர் இப்பழக்கத்துக்கு அடிமைப்பட்டுக் இடப்பதாக முடிவுகள் வெளிப்படுத்தவில்லை.

ஏதோ ஆர்வத்தில் ஓரிரு தடவைகள் மட்டும் இம்மருந்துகளை உபயோகப் படுத்திவிட்டுப் பிறகு நிறுத்தி விட்டவர்களை யெல்லாம் மருந்தடிமைப் பழக்கத்துக்கு ஆளானவர்கள் என்று முத்திரை குத்திவிடக் கூடாது.

**கேள்வி:** மேல் நாட்டிலிருந்து இங்கு படிக்க வரும் மாணவர்கள் மூலமாகத்தான் போதை மருந்துகள் நமது மாணவரிடையே பரவுவதாகக் கூறப்படுவது சரியா?

**லலிதா:** நம் வீட்டுப் பையன் அடுத்த வீட்டுப் பெண்ணுடன் நட்பு வைத்திருந்தால், என் பையன் பாதை தவறிப் போனதற்கு உங்க பெண்தான் காரணம் என்று, அடுத்த வீட்டுக்காரரைக் குற்றம் சாட்டுவதற்கு ஒப்பானது இந்த வாதம்.

ஆனால் Drug Peddlers என்று சொல்லப்படும் போதைப் பொருள் வியாபாரிகள் இம்மாதிரி மேல் நாட்டு மாணவர்களில் சிலரைத் தங்களது கருவிகளாகப் பயன் படுத்துவதாகக் கேள்விப்பட்டுள்ளேன்.

இத்தகைய சமுதாயப் பிரச்னைகளைத் தீர்ப்பதில் அரசுக்கும் பங்குண்டு. சில்லறை மருந்துக் கடைகள் (Retail Medical Shops) அங்கீகாரம் பெற்ற மருத்துவர்களின் சரியான 'பிரிஸ்கிரிப்ஷன்' இன்றி இத்தகைய போதை மருந்துகளை விற்பனை செய்யக் கூடாது. இம்மாதிரி மருந்துக்கடைகள் சரியானபடி விற்பனை செய்கின்றனவா என்று அரசாங்கம் தீவிரமாகக் கண்காணிக்க வேண்டியதும் அவசியம்.

பேட்டி: நாயகன்

புகைப்படம்: மன்னை மூர்த்தி

---

'எங்கே இவ்வளவு அவசரமா போறே?'

'என்ன சார் போகும்போதே அபசகுனமா கேக்கறீங்க? பெண்பார்க்க ஊருக்கு போறேன்.''

''என்னய்யா இங்கே இருக்கிற பெண்களைத்தான் தினம் பஸ் ஸ்டாண்டில் பார்த்து துன்பு நக்கியே, போறுதா?''

வி. விஸ்வநாதன்



# பாட்டிமார்களும் பேத்திமார்களும்

## ஜெயகாந்தன்

### 7. பேத்தி பிறந்தநாள்

சிங்காரம் வந்த கோலத்தைக் கண்டு டானியல் பாதிரியார் என்னமோ ஏதோ என்று பயந்து விட்டார்.

''வா வா, சிங்காரம்! உன்னைப் பார்த்தால் உடம்பு சரியில்லாதவன் போலிருக்கிறது. எங்கே இவ்வளவு அவசரமாய் ஓடி வருகிறாய்? முதலில் சற்று உட்காரு....'' என்று சிங்காரத்தின் தோளில் தட்டிக் கொடுத்து ஒரு சோபாவில் உட்கார வைத்தார்.

''உடம்புக்கு ஒண்ணுமில்லே... எனக்கு ஏதாவது ஒரு வேலை வேணும். நான் படிக்கவும் இல்லே... நீங்கதான் எனக்கு உதவி செய்யணும்'' என்று சொல்லி முடிப்பதற்கு முன் இரு கைகளிலும் முகத்தைப் புதைத்துக் கொண்டு தோள்கள் குலுங்க அழுதான் சிங்காரம்.

''ஓ! மை பாய்!'' என்று அவனை அணைத்துக் கொண்டு குழந்தை போல் ஆறுதல் தந்தார் டானியல் பாதிரியார்: ''என்ன நடந்தது? உங்கள் மொழி தான் எனக்குத் தெரியும். உங்கள் வாழ்க்கையின் சிக்கல்கள் எனக்குப் புரிவதே இல்லை... என்னாலான உதவிகளை நான் உனக்குச் செய்யக் கடமைப்பட்டவன். சொல்லு. என்ன நடந்தது?'' என்று ஆர்வத்தோடும் அன்போடும் கேட்டார் பாதிரியார்:

''உனக்கு என்ன தரட்டும். கொஞ்சம் திராட்சை மது தரட்டுமா? உனக்கு இந்த மனநிலையில் அது கொஞ்சம் நல்லதாயிருக்கும்...'' என்று சொல்லிக் கொண்டே எழுந்து போய், இரண்டு அழகிய முக்கோண வடிவக்கண்ணாடிக் கிண்ணங்களில் செந்நிற திராட்சை ரசத்தை ஊற்றி இரண்டு கைகளிலும் ஏந்தி வந்தார் பாதிரியார்.

சிங்காரம், அவர் தனக்குக் கொண்டு வந்து தருவது என்னவென்று தெரிந்து கொள்ளாமலிருந்தவன் திடீரென அதை அறிந்து பயந்து போய் எழுந்து நின்று வாயைப் பொத்திக் கொண்டு. ''சாமி, சாமி அது எனக்கு வேணாம்...'' என்று பதறித் தடுத்தான்.

கையிலிருந்த கிண்ணங்களைத் தனக்கும் சிங்காரத்துக்கும் நடுவேயிருந்த வட்ட மேஜையின் மீது வைத்துவிட்டு மணிகள் குலுங்குவது போல் உள்ளடங்கிச் சிரித்தவாறு டானியல் பாதிரியார் பிரம்பு நாற்காலியில் உட்கார்ந்து சிங்காரத்தைக் கண்கள் பளபளக்கப் பார்த்தார்.

''சிங்காரம் ... நான் உன்னைக் குடிகாரனாக்கி விடுவேன் என்று பயப்படுகிறாய்? அந்தப் பயம் நல்லதே! ஆனாலும் இது ஒரு நாகரிகம் என்பதாலும், நல்லது என்பதாலும் நீ இதைப் பருகலாம். என்னைப் போல் ஒரு பெரியவன் தரும்போது வேண்டாம் என்று மறுப்பது எங்கள் மரபுப்படி மரியாதைக் குறைவான காரியமாகும்'' என்று அவனிடம் சொல்லும் போதே இவர்களின் மரியாதை மரபுகள் பல நமக்குத் தெரியாதிருப்பதை நினைத்துக் கொண்டு சிரித்தார் பாதிரியார்.

சிங்காரம் தயங்கியவாறே, மரியாதைப் பண்பு கருதி அந்தத் திராட்சை ரசம் நிறைந்த கண்ணாடிக் கிண்ணத்தை எடுத்துக் கையில் வைத்துக் கொண்டு அந்த அழகை ரசித்துப் பார்த்தான்.

''சிங்காரம் — உனது நலனுக்காகவும், உன்மன அமைதிக்காகவும்'' என்று சொல்லி



டானியல் பாதிரியார் மதுவை உறிஞ்சினார். சிங்காரமும் புன்னகை செய்து அதை மெது வாகப் பருகினான். அஞ்சத்தக்க விதமாகவோ, அருவருப்பாகவோ அதன் ருசியும் மணமும் இல்லை என்று தெரிந்து அவன் அதை ஒரு மிடறு பருகித் திருப்தியுடன் சிரித்தான்.

''பார் இப்போதே உன் முகத்தில் ஒரு சந்தோஷமான மாறுதல் தெரிகிறது. சொல்லு உனக்கு என்ன நேர்ந்தது. ஏன் உடைந்து போனது போல இருக்கிறாய்?'' என்று மெது வான குரலில் மறுபடியும் விசாரித்தார் டானி யல் பாதிரியார்.

''சாமீ...நான் உடைஞ்சுதான் போயிட் டேன்! எங்க அண்ணைத்தை மேலே விரோ தத்தினாலே கேசு போட்டேன். அதுக்கு வழக்காடவும் ஸ்டாம்புக் கட்டணத்துக்கும் ஆயிரக்கணக்கிலே பணம் தேவைப்பட்டது. துபாஷ் தெரியுமில்லே உங்களுக்கு. அவர் கிட்ட போயி முப்பதினாயிரம் ரூபாய் கடனு வாங்கினேன். அவுரு சந்தோஷமாத் தான் கொடுத்தாரு...ஏதேதோ காயிதத் திலே எல்லாம் கையெழுத்து வாங்கிக்கிட் டாரு. நம்பளை நம்பிப் பணம் கொடுக் கிறாங்களே, அவங்களை நம்பிக் கையெழுத்துப் போட்டா தப்பில்லேன்னு நெனைச்சேன்...''

''பூ ... இடியட் ....'' என்று நெற்றியில் கைவைத்துப் பெருமூச்செறிந்தார் பாதிரி யார்.

''இப்ப நாலு வருஷமாச்சா? வட்டியோட சேர்த்துக் கடனுக்காக டிக்ரி வாங்கி என் சொத்தையெல்லாம் ஏலத்திலே கொண்டு வந்துட்டான்...'' என்று தனது விருத் தாந்தங்களை முழுவதையும் சொல்லி முடித்துத் தலை குனிந்து உட்கார்ந்திருந்தான் சிங்காரம்.



''எனக்கு இப்ப சொத்து போனதைப் பத்திக் கவலையில்லே. அவனவன் கஷ்டப்பட் டுச் சேர்க்காத சொத்தெல்லாம் இப்படித் தான் போகும்! ஆனா, சாமி.. என்னாலே வேறே ஏதாவது ஜீவனத்துக்கு உத்தியோகம் பார்க்க முடியாதா? ... என் பெண்டாட்டிக்கும் குழந் தைக்கும் மானமா ரெண்டு வேளைக் கஞ்சி ஊத்த முடியாதவனா நான் இருக்கேனே'' என்று தொடர்ந்து புலம்பிக் கொண்டிருந்த சிங்காரத்தைப் பார்க்கப் பரிதாபமாக இருந் தது அவருக்கு. சிங்காரத்தின் குடும்பப் பெருமைகளையும், அவனது தகப்பனார் மரு டேசன் பிள்ளையின் உதார குணங்களையும் எண் ணிப் பார்த்த பாதிரியார், ''உன் முன் னோர்கள் தேடி வைத்த சொத்து போனாலும் அவர்கள் தேடிவைத்த புண்ணியம் போய் விடாது'' என்று பரிவுடன் அவனது தலையை வருடினார்: ''சிங்காரம்! கவலைப்படாதே! உனக்கு இந்தப் பள்ளிக் கூடத்திலேயே உத்தி யோகம் போட்டுத்தரேன். உத்தியோகத்திலே உயர்வு தாழ்வு கிடையாதுன்னு உனக்குப் புரியணும். அவனவன் தன்மைக்கும் திறமைக் கும் ஏற்பத்தான் அது அமையணும். நீ ஆரம் பக் கல்வி வைக்கூட முடிக்கலே; அதனாலே இங்கே உனக்கு ஒரு பியூன் வேலை போட்டுத் தரேன்... நீ சொன்ன மாதிரி மானத்தோட உன் குடும்பம் கஞ்சி குடித்து வாழ இது போதும்... பிறகு பார்ப்போம். ஆண்டவன் நல்வழி காட்டு வான்'' என்று அவனுக்காகப் பிரார்த்தனை செய்தார் டானியல் பாதிரியார்.

மாதா கோயிலின் மணி முழங்குகிற ஓசை யைக் கேட்டு விடிவு காலம் பிறந்ததற்கான அறிகுறியே இது என்று எண்ணிச் சிங்காரம் மகிழ்ச்சியும் நம்பிக்கையும் பொங்கப் பாதிரி யாரின் பாதங்களில் சாஷ்டாங்கமாக விழுந்து கும்பிட்டான்.

கடன்காரர்கள் சிங்காரம் எதிர்பார்த்த படியே பெரிய வீட்டை ஏலத்துக்குக் கொண்டு வந்தார்கள். அந்தத் தெருவின் இருமருங்கி லும் ஜனங்கள் கூடி வேடிக்கை பார்த்தனர். வெட்டியானும் தலையாரியும் அமீனாவும், டவாலிச் சேவகனுமாய் வந்து அந்த வீட் டையே முற்றுகையிட்டனர். தலையாரி தன் கழுத்தில் கட்டித் தொங்கும் தமுக்கை முழக்கி மருடேசன் பிள்ளையின் மகனாகிய சிங்காரம் பிள்ளைக்குச் சொந்தமான, மேற்படி தெரு, மேற்படி எண்ணுள்ள வீடு ஏலத்துக்கு வருவ தாக ஊரறிய அறிவிப்புச் செய்தான்.

''மருடேசன் பிள்ளையின் பாரியாள் சூடிக் கொடுத்த சுடர்க்கொடி அம்மாள் மேற்படி வீட்டை ஏலத்துக்கு எடுக்கத் தயாராயிருக் கிறார்'' என்று அறிவித்து, கோதையின் சார் பில் தாம் வந்திருப்பதாகக் கம்பீரமாகக் கட்டியம் கூறிக் கொண்டு களிதுலங்கும் முகத் தோடு விளக்குச் சாமி தோன்றினார் அங்கே. தன் வீட்டுத் திண்ணையில் வெள்ளியிலான வெற்றிலைப் பெட்டி சகிதம் கோதையும் வந்து வீற்றிருந்தாள்.....

''என்ன நடந்தால் எனக்கென்ன?'' என்று தோட்டத்து வழியாகப் பள்ளிக் கூடத்துக்கு ஓடிப்போனான் சிங்காரம். அவனுக்கு உத்தி யோகத்துக்கு நாழியாகிட்டதாம். சிங்காரத்



''வீட்டிற்கு ஒரு மரம் வளர்ப்போம்' பிரசாரம் துவங்குவதற்கு முன்பே நாங்கள் மரம் வளர்க்கத் துவங்கிட்டோம்!''

தை வேலைக்குச் சேர்த்துக் கொண்ட பாதிரியார் அவனை மற்றவர்கள் யாரும் வேலையிடா வண்ணம் தனது அந்தரங்கப் பணியாளன் என்கிற பெயரில் தன்னுடன் எப்போதும் வைத்துக் கொண்டார். நடைமுறையில் அவனுக்கு ஒரு வேலையும் இல்லை. எனவே அவனது நெடுநாளைய ஆசையான ஆங்கிலம் கற்றுக் கொள்ளும் முயற்சியில் தானே சில புத்தகங்களை வாங்கி வைத்துப் படித்துக் கொண்டிருந்தான் சிங்காரம். அவனுடைய ஆர்வத்தைக் கண்டு டானியல் பாதிரியார் தினசரி அவனுக்கு ஒரு மணி நேரம் ஆங்கிலம் போதிக்கத் தீர்மானித்தார்.

பள்ளிக்கூடம் முடிந்து மாலை வீடு திரும்பிக்கொண்டிருந்த சிங்காரத்தை வழியிலேயே மறித்துப் பிடித்துக் கொண்ட விளக்குச்சாமி காலையில் நடந்த விஷயங்கள் முழுவதையும் சிங்காரத்துக்கு விளக்கிச் சொல்லிக் கோதையின் பெருந்தன்மையையும், சிங்காரத்துக்கு அவள் செய்திருக்கும் பேருதவியையும் வானளாவப் புகழ்ந்தார். அந்த அன்பான சின்னம்மாவிடம்' நீ அநாவசியமாகக் கோபித்துக் கொண்டிருக்கலாமா என்று உருக்கமாகக் கேட்டார். நடந்ததை யெல்லாம் மறந்து சின்னம்மாவிடம் மன்னிப்புக்கேட்டுக் கொள்ளும்படி விளக்குச்சாமி சிங்காரத்துக்குப் புத்திமதி சொன்னார்.

சிங்காரம் குனிந்த தலையுடன் அவர் சொல்வதை மௌனமாகக் கேட்டுக் கொண்டாலும் 'இந்தப் பொட்டச்சிகளிடம் காசு இருக்கிறது என்பதற்காக நான் ஒன்றும் பணிந்து போக முடியாது' என்றே மனத்துள் கறுவிக் கொண்டு நடந்தான்.

''சாமி, உங்க நியாயமெல்லாம் எனக்குப் புரியுது. இந்தக் குடும்பம் இந்தச் சொத்து. இந்த சனங்க இவங்களோட எல்லாம் எனக்கு இனிமே ஒரு சொந்தமும் கிடையாது. கோதையம்மாள் அந்த வீட்டை ஏலத்திலே எடுத்தா அது அவங்களுக்குச் சொந்தம். அந்த வீட்டு வாசற்படியைக் கூட நான் மிதிக்க மாட்டேன். நான் எங்கேயாவது ஒரு குடிசை வீட்டுக்குப் போயி என் சம்பாத்தியத்திலே குடும்பம் நடத்துவேனே தவிர இவளுங்க தயவிலே வாழ மாட்டேன்'' என்று உறுதியாகச் சொன்னான் சிங்காரம்.

''தம்பி! உனக்கு யார் மேலே இவ்வளவு கோபம்? உன் சின்னம்மா அந்த வீட்டை ஏலத்துக்கு எடுத்து உனக்குப் பிறக்கப் போகும் மகன் பேரிலேதான் எழுதி வைக்கப் போறதாகச் சொல்றாங்க.....'' என்று ஏதேதோ நியாயங்களை எடுத்தோதியவாறு சிங்காரத்தைத் தோப்புப் பக்கம் அழைத்து வந்தார்.

அப்போது அந்தி நேரம். இதுபோன்ற சாயங்கால மயக்கத்தில் மருதேசன் பிள்ளையோடு தாம் வார்த்தையாடிக் கொண்டு நடந்துதிரிந்த பழங்கால நிகழ்ச்சியே போன்று இப்போது அவரது மகனோடு தான் உலாவுவதை எண்ணி மகிழ்ச்சியோ வருத்தமோ இல்லாமல் வாழ்வின் மந்தகாசத்தை அநுபவித்துச் சிரித்தார் சாமியார்.

அந்திச் செக்கரின் பின்னணியில் நிழல்கள் போல் தெரிந்த சாமியாரையும் சிங்காரத்தையும் தூரத்திலிருந்தே கண்டுவிட்ட காந்தி

தர்மசங்கடம்

தம்பு!



மதி, ''தம்பி!.... ஏ! சாமியாரே... ஓடியாங்க.... ஓடியாங்க..... அமுதுவுக்குப் பொண் கொழந்தை பொறந்திருக்குது... மருடேசம் பிள்ளை பொறக்கப் போருருன்னு நெனைச்சுக்கிட்டிருந்தோமே .... அம்பிகை அம்மாதான் வந்து அவதாரம் பண்ணியிருக்காங்க. ஓடியாங்க, வந்து பாருங்களேன்....'' என்று கூவியவாறு ஓடிவந்தான்.

வாய்க்கால் கரையருகே வந்து கொண்டிருந்த சிங்காரம் நின்று திரும்பிக் காற்றில் மிதந்து வரும் காந்திமதியின் குரலைத் தெளிவாகக் கேட்டான். தென்னை மரத்தின் கீற்றுகள் காற்றில் சலசலத்துச் சிலிர்த்தன.

''இதே மாதிரி ஓர் அந்தி நேரத்திலே தான் அம்பிகை அம்மாள் பிறந்தாளாம். இதேபோல் ஓர் அந்தி நேரத்திலேதான் அப்பாவின் மடியில் தலையைச் சாய்த்து அம்மா உயிர் பிரிந்தாள். அதே இடத்தில் அந்தக் கட்டிலிலே அமுதுவின் உதரத்திலே அம்பிகை வந்து அவதாரம் பண்ணியிருக்காள்-அம்பிகைன்னுதான் பேரு வைக்கணும்'' என்று அவ்வையார்க் கிழவி கொள்ளுப் பேத்தி கொண்டுவிட்ட குதூகலத்தில் உரக்கச் சொல்லிக் கொண்டிருந்தாள்.

சற்று நேரத்துக்கு முன் தனக்குச் சொந்தமில்லாத இந்த வீட்டில் அடியெடுத்துவைக்க மாட்டேன் என்று சங்கற்பித்துக் கொண்ட சிங்காரத்தைக் கூடத்து அறையிலிருந்து அம்பிகை அம்மாளே அழைப்பது போல் புதிய குழந்தையின் குரல் விரிட்ட சத்தம் கேட்டு வீட்டுக்குள் பாய்ந்து ஓடினன் சிங்காரம்....

வீடு நிறைய மறுபடியும் பெண் மக்களே பாட்டிமார்களாகவும் பேத்திமார்களாகவும் சூழ்ந்திருப்பது போலவும், இந்தக் குடும்பத்தைச் சேர்ந்த ஆண் மக்களே அருகிப் போய், அதிகாரம் குன்றி ஊழியம் புரிஇறவர்களாகிவிட்ட உண்மை பளிச்செனத் தெரிந்தது சிங்காரத்துக்கு.

பிறந்தது பெண்ணைது குறித்துக் கோதைக்கு மிகுந்த ஏமாற்றம். பிள்ளைக் குழந்தை பிறந்தால் மருடேசன் என்று பேரிட்டு, தன் தோளில் ஏற்றிய சுமைகளையெல்லாம் திருப்பிக்கொடுத்து விட்டுப் போக வேண்டும் என்ற அவசரத்தில் அல்லவா வாழ்ந்து கொண்டிருக்கிருள் கோதை! இன்னும் எவ்வளவு காலம் துணையைப்பிரிந்து உயிர் சுமந்து வாழ்வது என்ற ஏக்கம் நெஞ்சில் கனக்கக் கன்னத்தில் கையூன்றி ஊஞ்சலில் உட்கார்ந்திருந்தாள்.

''ஆணுக்கும் பெண்ணுக்கும்
என்ன வித்தியாசம்?
ஆண்டவன் படைப்பினில்
சின்ன வித்தியாசம்.
அன்புக்கும் பகைமைக்கும்
என்ன வித்தியாசம்?
அநுபவித்துச் சொல்லுகிறேன்
சின்ன வித்தியாசம்!''

என்று தாளம் போட்டு உற்சாகமான ஸ்தாயியில் பாடிக் கொண்டிருந்தார் விளக்குச்சாமி.

முற்றும்




### சென்ற வாரம்

மூலையடிவாரத்தில் கல் உடைக்கும் க்வாரியை நோக்கிச் செல்லும் பாதையில் ராஸிமுக்குத் திருப்பத்தில் பெரியசாமி கொஞ்சம் நிலமும் ஒரு டீக்கடையும் வைத்துக்கொண்டு தம் மனைவி திலகம், செவிட்டு ஊமை மகள் மனோகரியுடன் இருக்கிறான். புதுசாகத் துபாய் பணத்தில் எசமான் வாங்கிய பென்ஸ் லாரியின் டிரைவர் தாஸ் வந்து இறங்குகிறான். கூட வந்த க்ளீனர் சிறுவன் காதர் மனோகரியைக் கூட்டி வருகிறான். தாஸ், ''உன் சம்ஸாரம் எங்கே?'' என்று பெரியசாமியைக் கேட்கிறான். நிலத்தைக் கிளறிக் கொண்டிருக்கையில் மனோகரிக்கு ஒரு கல் கிடைக்கிறது. கூழாங்கல் போல் இருக்கும் அது பட்டை தீட்டப்படாத வைரம் என்பது அவர்களுக்குத் தெரியாது.

## அத்தியாயம் 2
## வைரப் பிரயாணம்

க்வாரிக்குச் சென்றிருந்த தாஸின் லாரி திரும்பி வரும்போது மழை இங்கே பெய்வ தில்லை என்று தீர்மானித்துத் தன் மின்னல் நெக்லஸ் அணிந்த கறுப்புத் தேவதைகளை அழைத்துக் கொண்டு கிழக்கே போய்விட்டது. லாரி திரும்பி வந்தபோது திலகம் கடை வாசலில் நின்று கொண்டிருந்தாள். தாஸ் அவளைக் கேபினிலிருந்து பார்த்த போது ''நிக்கிறு பாரு காதரு!'' என்றான். காதர் கவனிக்கவில்லை.

தாஸ் சட்டென்று நிறுத்திக் குதித்து இறங்கினான். களத்தில் உளுந்து மூட்டைகளை மூடுவதற்குச் சென்றிருந்த கணவனை அழைக்க மனோகரியைத் தொட்டுச் செய்தி சொல்லி அனுப்பினாள் திலகம்.

தாஸ் அவளைப் பார்த்துச் சிரித்தான். ''சௌக்கியமா?''

''ம்'' என்றாள்.

காதர் மனோகரி செல்வதைப் பார்த்துக் கொண்டே, ''அந்தப் பெண்ணுக்குப் பேச்சு வராதுங்களா? ச்ச்! இப்படித்தாங்க உயர்ந்த வர்கள்ளை..... நானு நடவ பார்த்தேங்க!''

தாஸ் அதற்குள் லாரிப் பக்கம் சென்று ஒரு பழுப்புப் பொட்டலத்தை எடுத்து வந்தான்.

''என்னது?'' என்றாள் திலகம்.

''சிந்தாமணியில் எடுத்தேன். எண்பத்து அஞ்சு ருவா. வெளி நாட்டுச் சரக்கு! கட்டிப் பாருங்க. உங்களுக்கு நல்லாவே இருக்கும்.'' தாஸ் அந்தப் பொட்டலத்தை உருவி உள்ளே பச்சையும் கத்தரிப்பூ வர்ணமுமாக ஒரு புடவையைக் காண்பித்தான். திலகத்துக்குப் பிடிக்கவில்லை.

''எடுத்துக்குங்க! பெரியசாமிதான் வாங்கிட்டு வரச் சொன்னான்.''

''எண்பத்து அஞ்சு ரூபாய்க்கு எங்கு போவாரு! அதெல்லாம் சும்மா சொல்லியிருக்காருங்க! கையிலே ஒத்தைக்காசு கிடையாது!''

''பணத்துக்கென்ன மெள்ளக் குடுத்துக்கலாம்!''

''வெச்சுக்குங்க. அவர் வரட்டும்.''

''ஏய் காதர் ஓடிப்போயி பெரியசாமியை அழைச்சுக்கிட்டு வா, ஓடு!''

''எம் பொண்ணே போயிருக்குதுங்க!''

''அண்ணே! பால்கனி டிக்கட்டுக்கூட வாங்கிரலாம்னு போனேன். கிடைக்கலிங்க! நீங்க பாத்திங்களாம்மா? ஒரே வானம் ஒரே பூமி?''

''இல்லேப்பா!'' என்று சிரித்தாள் திலகம். ''இந்தப் பையன் புதுசா?''

''ஆமாங்க.''

''என் பேரு காதர்ங்க!'' என்று அந்தப் பையன் திலகத்தைப் பார்த்து மிகுந்த வசீகரத்துடன் சிரித்தான். கிணையடிக்குக் கொண்டு சென்று குளிப்பாட்டித் தலை சீவிப் புதுசாகச் சொக்காயும் டிராயரும் மாட்ட வேண்டும் போலிருந்தது.

''உங்க அப்பா அம்மா எல்லாரும் எங்கே?'' என்றாள்.

''ப்ச்! அவங்கள்ளாம் இல்லீங்க'' என்றான் டீஸல் இல்லை என்பது போல.



தாஸ், ''ஒரு தமாஷ் பாருங்க! டேய் காதர் நீ எங்கேடா பொறந்தே?'' என்றான்.

''இங்கிலாந்திலே'' என்று கண் சிமிட்டினான் காதர்.

''இங்கே எப்படி வந்தே?''

''வெள்ளைக்காரங்க பஸ் ஸ்டாண்டிலே உட்டுட்டுப் போயிட்டாங்க!''

''பின்னே காதர்னு எப்படிப் பேர் வந்தது?''

''அந்தப் பட்டரையில பேர் வச்சாங்க! காது பெரிசு அதுனால.''

காதர், தாஸ் இரண்டு பேரும் சிரித்தார்கள். திலகத்துக்கு அழுகை நெஞ்சை முட்டியது. ''யார் பெத்த புள்ளையோ'' என்றாள்.

தாஸ், ''காதர் ஓடிப் போய்ப் பார்த்துட்டு வந்துடு. சின்னப் புள்ளே தனியாப் போயிருக்குது'' என்றான். காதர் கற்டணயாப்லாரி ஓட்டிக்கொண்டு ஓடினான். திலகத்துக்குத் தாஸுடன் தனியாக நிற்கப்பயமாக இருந்தது. தாஸ் கயிற்றுக் கட்டிலில் உட்கார்ந்தான். திலகம் கணவன் வரப் போகிற ஒற்றையடிப் பாதையைப் பார்க்கையில் முதுகு பூரா தாஸின் பார்வையை உணர்ந்தாள்.

நேராக அவள் முன் நடந்து கடைக்குள் சென்று அந்த மரப் பீரோவுக்குப் பின்னால் நின்றாள். ஓவல்டின் டப்பாவில் சர்க்கரை கட்டியிருந்தது.

''நீங்க எப்ப எங்க வீட்டுக்கு வரீங்க?''

''அவரு வரட்டுங்க!''

''அவன் வரமாட்டான்.''

''சொல்லிப் பாருங்க.''

''வந்தா, டவுன் எல்லாம் உங்களுக்குச் சுத்திக் காண்பிச்சு, அப்புறம் உங்க மகளுக்கு, வைத்தியம் பார்க்க ஒரு பெரிய டாக்டர் பத்து ஊசி போட்டாச் சரியாப் போயிடும் னிட்டுச் சொன்னார். கோபிலே இருந்து கூட அவரைப் பார்க்க வராங்க. அமெரிக்காவிலே படிச்சவரு! முதலாளிக்கு அவர் தான் வைத்தியம்!''

''பெரிய டாக்டருங்க எல்லாம் பார்த்துக் கைவிட்டாங்க!''

''கவர்மெண்ட் ஆஸ்பத்திரியிலே சரியாகக் கவனிக்க மாட்டாங்க. நான் சொல்றது, ப்ரை வேட்டுங்க!''

''அவர் வந்தாச் சொல்லலாமுங்க! ஊர்ல உள்ள கோயிலுக்கெல்லாம் செலவளிச்சாச்சுங்க!''

''சர்க்கார் ஆஸ்பத்திரியிலே நம்ம மாதிரி ஏழை பாளைங்களைக் கவனிக்க மாட்டாங்க. நம்ம வண்டி கொச்சி குருவாயூர் போவுது. வரீங்களா?''

''எப்படிச் சட்டுனு வந்துற முடியும்? கடை இருக்குது!''

''ஒரேயடியா வந்துருங்களேன் எங்கூட!'' என்றான் தாஸ்.

'எங்கூட' என்பதைச் சற்று சன்னமாகச் சொன்னான்.

''என்னது?''

''உங்க எல்லாரையும்தான் சொல்றேன். எதுக்காக ஒத்தக் கடையை வெச்சுக்கிட்டு லாரிக்காரங்களுக்கு ராத்திரி யெல்லாம் டீ அடிச்சுக்கிட்டு.... பொகையிலே ஒடம்பைக் கெடுத்துக்கிட்டு? நான் கோயமுத்தூரில எல்லா வசதியும் செய்து தாரேன். வந்திர்றீங்களா?''

''இவரு இந்த இடத்தை விட்டு நவர மாட்டாரு! நிலம் இருக்குதில்ல!''

''என்ன நிலம்! என் வீட்டிலேயே தங்கிக்கலாம் நீங்க..., வா, பெரியசாமி!'' பெரியசாமி நேராக நடந்து வந்து தாஸ் அருகில் கயிற்றுக் கட்டிலில் உட்கார்ந்தான்.

''எங்க இவ?''

''உள்ளே இருக்குது.''

''ஏய் திலகம்! தாஸ் வந்திருக்காரு பாரு!''





''பார்த்தங்க.''

''என்ன பொட்லம்?''

''சேல எடுத்தேன்.''

''யாருக்கு?''

''என் தங்கச்சிக்கு. கலரு நல்லா இல்லேன்னுடுச்ச. உன் சம்சாரத்துக்கு ஆவுமா பாரு!''

''என்ன வெல?''

''வெல எதுக்கு? முதல்லே உடுத்திப் பாக்கட்டும்.''

காதர் இதற்குள் மனோகரியின் மொழியில் சில வார்த்தை ஜாடைகள் கற்றுக்கொண்டு விட்டான். ''நான் லாரி ஓட்டுவேன்; உயரம்தான் போதாது!—

''எனக்கு இதபார், டயர் இருக்கு பாரு, இது கனட்டத் தெரியும்—

''அப்புறம் இதோபாரு பொண்ணே இதோ பாரு....'' என்று ஓர் அந்தர் அடித்துக் காண்பித்தான். மனோகரி சிரித்தாள். காதர் பட்டரையில் சேருவதற்கு முன் ஒரு தெரு வித்தைக்காரனிடம் இருந்திருக்கிறான்.

''வா இந்தப் பக்கம்!.''

''வந்தேன்.''

''கேட்டால்?''

''சொல்லுவேன்.''

''இந்தப் பச்சப் புள்ளே எங்க இருக்குது?''

''அந்தரத்திலே தொங்குது.''

''விழுந்தா?''

''செத்துப் போயிடும்.''

மூணு வயசில் காதர் முப்பது அடி உயரத்தில் ஒரு மூங்கில் கழியின் நுனியிலிருந்து அந்த மனித வட்டத்தைப் பார்த்துக் கொண்டிருக்கத் திடுதிப்பென்று மூங்கில் நீக்கப்பட கூட்டமே ''ஐயோ'' என்று அலற வித்தைக்காரன் லாகவமாகப் பிடித்துப் பூமியில் வாங்கியிருக்கிறான். அப்புறம் சலாம் போட்டுக்கொண்டே சுற்றி வர அவன் சின்னக் கைகளில் பைசாக்கள் நிரம்பி யிருக்கின்றன. அப்போது கற்றுக் கொண்ட கரணம்.

மனோகரி அட்டகாசமாகச் சிரித்தாள்... காதர், ''ஏங்க இதுக்கு நிசமாகவே பேச வராதா? காது கேக்குமா?'' என்றான்.

''கேக்காது.''

''கேக்கற மாதிரி செய்யுது?''

''என்ன செய்யுது?''

''சிரிக்குது.''

''அது எமன். எல்லாத்துக்கும் சிரிக்கும்.''

''இல்லிங்க. அதுக்கு நல்லாக் கேக்குது. பேசறது எல்லாம் புரிஞ்சுக்குதுங்க. பாருங்க!''

காதர் ஒரு கையை வளையமாக்கி இடுப்பில் வைத்துக் கொண்டு தவ்வித் தவ்வி நடந்து அவ்வப்போது நாக்கைக் கடித்துக் கொண்டு ''ஓரம்போ! ஓரம்போ! ருக்குமணி வண்டி வருது ஓரம்போ!'' என்று பாடி ஆடினான்.

''பத்திங்களா சிரிக்குது!''

''பையன் துடிங்க!'' என்றான் பெரிய சாமி.

''இவனை நாப்பது ரூபாய்க்கு வாங்கினாரு எங்க முதலாளி.''

''நாப்பது ரூபாய்க்கா?''

''ஆமா. வாங்கிட்டம். பட்டரையிலே நாப்பது ரூபா கொடுத்தாத்

தான் பையனை விடுவோம்னுட்டாங்க. விசுவாசம். பீடி கீடி குடிக்க மாட்டான். திருடு கிடையாது. ஒரு காலத்திலே இவனை டிரைவரா ஆக்கிடலாம். என்னடா காதரு! வாடா டேய், கிளம்பலாம்.''

காதர் ''பொண்ணே! போயிட்டு வரட்டுமா?'' என்று அட்டகாசமாகச் சைகை செய்து கேட்டான்.

மனோகரி ''இரு'' என்று காட்டிவிட்டு அவனை நிறுத்திக் கடையின் ஓரத்துக்குச் சென்று அந்தக் கல்லை எடுத்துக் கொண்டு வந்து அவனுக்குக் கொடுத்தாள்.

''என்ன இது கல்லு!'' என்று காதர் அதைத் திருப்பித் திருப்பிப் பார்க்க....

''அப்பலேர்ந்து அந்தக் கல்லை வெச்சுக் கிட்டு விளையாடிக்கிட்டிருந்தது. கூழாங்கல்லு போல. மண்ணை நோண்டிக்கிட்டே இருக்கும். அப்பக் கிடைச்சிருக்கும். நீ தமாசா டான்ஸ் ஆடினே இல்லே அதுக்கு உனக்குப் பிரைஸ் குடுக்குது. வாங்கிக்க!''

''தாங்க்ஸ் தங்கச்சி'' என்று அதைத் தன் டிராயர் பைக்குள் போட்டுக்கொண்டான்.

தீட்டப்படாத வைரங்கள் ஆம்ஸ்டர்டாம் ஆன்ட்வெர்ப் டெல் அவிவ், லண்டன், பம்பாய் போன்ற மார்க்கெட்டுகளில் ஒரு காரட்டுக்கு 900 டாலர் வரை விலை போகும். தீட்டப்படும்போது அந்த வைரங்கள் எடையில் ஏறக்குறைய பாதி சேதமாகும். ஆனால் மதிப்பு உயரும், நல்ல, மிக நல்ல சுத்தமான தீட்டப்பட்ட வைரங்களுக்கு ஒரு காரட்டுக்குப் பத்தொன்பதாயிரம் டாலர் வரை கூடக் கிடைக்கும். காதர் வைத்திருந்த அந்தக் கல்லின் எடை ஒன்பது காரட் இருக்கலாம்.

தாஸ் தன் லாரியில் ஏறிக் கொள்ள, பெரியசாமியைப் பார்த்து ''பெரியசாமி, எப்ப நம்ம வீட்டுக்கெல்லாம் வரதா உத்தேசம்?'' என்றான்.

''எங்கங்க! கடையை உட்டுட்டு நான் எப்படி வரது சொல்லுங்க! இவளை வேணா ஒருக்கா அனுச்சுக்கிட்டுப் போங்க. சினிமாவுக்கு ரொம்ப ஆசை. சினிமாவைக் கண் கொட்டாமப் பார்க்கும்.''

தாஸ் லாரியைக் கிளப்பி ஒரு தடவை கார் ஹாரனைத் தொட்டான்.

''வரட்டுமா?'' என்றான் திலகத்தைப் பார்த்து.

''ஒரு நிமிஷம் இருங்க. புதுப்பட்டு வழியாத்தானே போறீங்க!'' என்று கேட்டான் பெரியசாமி.

''ஆமாம்.''

''அங்கே இறங்கிக்கிறேனுங்க'' என்று லாரியில் ஏறிக் கொண்டான்.

திலகம் திடுக்கிட்டாள். ''எங்க திடீர்னு கிளம்பிட்டீங்க!''

''புதுப்பட்டிலே ஜோலி. எட்டரை மணி பஸ்ஸிலே திரும்பிடறேன்!''

அவள் மற்றொரு கேள்வி கேட்பதற்குள் லாரி கிளம்பிச் சென்று விட்டது. என்ன ஜோலி என்று தெரியும் அவளுக்கு. குடிப்பதற்குச் செல்கிறான். கேட்டால் அடிப்பான்.

திலகம் கணவன் இல்லாததால் பெட்ரோமாக்ஸை ஏற்றவில்லை. சிம்னி விளக்கேற்றி அலுமினியப் பாத்திரத்தில் இருந்த சோற்



# குளோஸ்அப்



✖ சுப்புலட்சுமி ஜெகதீசன் ✖ எம். பக்தவத்சலம்

## திருமதி சுப்புலட்சுமி ஜெகதீசன்

நாகைப்பட்டினம் இடைத் தேர்தலின் போது நடைபெற்ற சைக்கிள் ஊர்வலத்துக்குத் தலைமை ஏற்றுப் பரபரப்பை ஏற்படுத்திய அமைச்சர் சுப்புலட்சுமி ஜகதீசன், முன்னம் கொடுமுடி ஸ்ரீசங்கர வித்யாலயா பெண்கள் உயர்நிலைப் பள்ளியில் உதவித் தலைமையாசிரியராக இருந்தபோது சைக்கிளில் தான், பள்ளிக்குச் சென்று வருவாராம். ஆண்டுத் தொடக்கத்தில் பள்ளிக்கு வராமல் நின்றுவிடும் பெண்களையும் ஆண் குழந்தைகளையும் பள்ளியில் சேர்க்க வைப்பதற்காக இவர் மற்ற ஆசிரியைகளுடன் சைக்கிளிலேயே எட்டு மைல், பத்து மைல், கிராமம் கிராமமாகச் சென்று பெற்றோர்களைச் சந்திப்பதுண்டாம்.

காமராஜரின் சீடரான வடக்குப் புதுப்பாளையம் சின்னசாமிக் கவுண்டரின் மகளான இவரை இப்போதும் அப்பகுதி மக்கள் அழைப்பது ''வி.பி. டீச்சர்'' என்ற பழைய பெயரில்தான்.

இந்த அமைச்சரின் மொடக்குறிச்சித் தொகுதியில் பதனீர் இறக்கும் வேலையில் பெண்களும் ஈடுபடுகிறார்களாம். மரம் ஏறுவதற்கு வசதியான சீருடை ஒன்றை இந்தப் பெண்களுக்குக் கதர் கைத்தொழில் வாரியம் மூலம் வழங்க இவர் ஏற்பாடு செய்துள்ளார்.

## திரு. எம். பக்தவத்சலம்

பெரியவர் திரு பக்தவத்சலம் மூன்றுமுக்காலம் ட்ராபிகல் இன்ஷூரன்ஸ் கம்பெனியில் ஆயுள் இன்ஷுரன்ஸ் அமைப்பாளராகவும் இருந்திருக்கிறார்.

அரசியலுக்கு அடுத்தபடி இவர் முக்கியமாகக் கவனம் செலுத்தியது பத்திரிகைத் துறையில்தான். 'இந்தியா', 'பாரத தேவி' இதழ்களில் அரசியல் கட்டுரைகளும் தலையங்கங்களும் எழுதியதுண்டு.

சுதந்திரப் போராட்ட காலம் பற்றிப் பெரியவர் கூறுவது: ஊர்வலத்தில் போலீஸ் தடியடிப் பிரயோகம் நடக்கும் என்று தெரிந்தும் திமிதித் திருவிழாவில் நெருப்பில்

இறங்குகிறவன் என்ன உணர்ச்சியில் உற்சாகத்தில் ஈடுபடுவானோ, அதே போல் நாங்கள் அப்போது ஊர்வலம் சென்றோம். ஊர்வலத்தைக் கலைக்கப் போலீசார் அடித்த போது பெரியவருக்குப் பிரம்படி விழுந்தது. ஆனாலும் உணர்ச்சி வேகத்தில் அப்போது தெரியவில்லை. கைது செய்து கொண்டு போன பிறகு அடிபட்ட இடம் தடித்துப் போனதைக் கண்டு புரிந்து கொண்டாராம்'

### திரு. இ. வேங்கடசுப்பிரமணியம்

உலகப் புகழ் பெற்ற கல்வி நிபுணரும் இங்கிலாந்து நாட்டு யார்க் பல்கலைக் கழகத்தின் கல்வித் துறைப் பேராசிரியருமான டாக்டர் இயான் லிஸ்டர் எனும் கல்வியாளர் அண்மையில் பல நாடுகளையும் சுற்றிவிட்டு (இந்தியா உட்பட) ஓர் அறிக்கை அளித்திருக்கிறார். அதில் அவர் சந்தித்த கல்வியாளர்கள் பற்றிய குறிப்புக்களைக் கொடுத்துள்ளார். சென்னை வந்திருந்தபோது அவர் தமிழகப் பள்ளி கல்வி இயக்குநர் டாக்டர் இ. வேங்கட சுப்பிரமணியத்தைச் சந்தித்தார். தமிழகக் கல்வி இயக்குநர் பற்றி அவர் தமது அறிக்கையில் கூறியுள்ளதாவது:

''நான் பார்த்த இந்தியக் கல்வியாளர்களுள் எல்லாம் மிகவும் திறமையான, செயல்முறையில் சிறந்த கல்வியாளர் டாக்டர் இ. வேங்கடசுப்பிரமணியம்தான்.''

### 'லிப்கோ' வி. கிருஷ்ணஸ்வாமி சர்மா

இவர் தம் இரண்டு கண்களையும் தானம் செய்திருக்கிறார். இவருடைய மரணத்துக்குப் பின் அவை இரண்டு பேருக்குப் பார்வையளித்துள்ளன.

எந்த வைணவத் திருக்கோவிலுக்காவது 'சடாரி' வேண்டும் என்று கேட்டால், உரிய விசாரணைக்குப் பின் சர்மா வழங்குவார். சுமார் ரூ. 75 மதிப்புள்ள இது போன்ற 846 சடாரிகளை இவர் வழங்கியிருக்கிறார்.

தீவிர வைணவராக இருந்தும் சர்வசமய உடன்பாடு கொண்ட இவர், தமது புத்தகப் பதிப்பகத்துக்கு வைத்த பெயரே ஒரு கிறிஸ்துவப் பெயர்தான்: லிட்டில் ஃபிளவர் என்பது அருளன்னையின் பெயர்களுள் ஒன்று.

'யெஸ்பால்'

இ. வேங்கடசுப்பிரமணியம் — கிருஷ்ணசாமி சர்மா



# குளோஸ்அப்

யைப் பெண்ணுக்குப் போட்டான். தனக்குச் சோறு போதவில்லை. கணவன் மேல் எரிச்சலாக வந்தது.

ஒன்பது மணி இருட்டில் அந்த பஸ்ஸின் ஜன்னல் கண்களுக்குத் தெரிய அதன் இஞ்சின் சப்தமும் கேட்கப் பெரியசாமி பஸ்ஸிலிருந்து உதிர்க்கப்பட்டவன் போல் தள்ளாடிக்கொண்டு நடந்து வந்தான்.

''பாத்து நட பெரியசாமி எங்களுக்கும் கனையிலே விழுந்திடப் போறே'' என்றான் பஸ் டிரைவர். ''போப்பா ரைய்....''

''திலகம் தூங்கிட்டியா?''

''சாப்பிட்டீங்களா?''

''எனக்குப் பசி இல்லே, வடை தின்னேன்.''

பரிச்சயமான அந்த நாற்றம் அவன் மூச்சுக் காற்றில் வீசியது.

''குழந்தை தூங்கிருச்சா?''

திலகம் தன் பெண்ணைத் தொட்டுப் பார்த்தாள். விழித்துக் கொண்டிருந்த மனோகரி கண்களை மூடிக் கொண்டாள். அவளைத் தள்ளி வைத்து விட்டுப் பெரியசாமி பாயில் படுத்தான்.

மனோகரிக்குப் புரியவில்லை. அழுகை வந்தது.

இரவு பத்து மணிக்குக் காதருடன் கோவைக்கு வந்தது அந்த வைரம். தூக்கக் கலக்கத்தில் இருந்தான் சிறுவன். வரும் வழியில் தாஸ் பரோட்டா குருமா தின்றபோது அவனும் கொஞ்சம் சாப்பிட்டான். பசி இல்லை. லாரி எஜமான் வீட்டுப் பின்புறத்தில் நின்றது. அருகே தென்னோலை வேய்ந்து சாமி ஐயப்பன் படத்துடன் சுவரெல்லாம் எண்ணெய் மசல் கரை படிந்த ஒரு சின்ன ஷெட். அதன் ஒரு மூலையில் காதருக்கு என்று ஒரு சதுர அடி இடம் உண்டு. சின்னதாக மர அலமாரி, சினிமாப் பாட்டுப் புஸ்தகங்கள், ஐந்து செண்டிமீட்டர் வட்டத்துக்கு ஒரு கண்ணாடி, பல்லுப் போன சீப்பு, கமலஹாஸன் படம், கொஞ்சம் அழுக்குக் குறைந்த நீல டிராயர், தாஸ் கொடுத்து வெட்டித் தைத்த ஒரு சட்டை.

காதர் தன் டிராயர் பைக்குள் உறுத்தின கல்லை எடுத்துத் தன் அலமாரியில் வைத்தான். பழுப்பாகத்தான் இருந்தது.

தாஸ் எல்லாவற்றையும் பூட்டிவிட்டுச் சாவியைச் சிறுவனிடத்தில் கொடுத்து ''முதலாளி வீட்டில் கொண்டு போய்க் கொடுத்திரு'' என்றான்.

''அந்தப் பொண்ணு பேரென்னங்க?''

''எந்தப் பொண்ணுடா?''

''அதான் ரானிமூக்கில் பார்த்தமே, ஊமை?''

''மனோரமா, மனோன்மணின்னு ஏதோ சொன்னாளே!''

''அந்தம்மா பேரு?''

''திலகம்!... ''டேய் காதரு! பார்த்துக் கிட்டே வா. ஒரு நா இல்லாட்டா ஒரு நா நானு....''

தாஸ் அந்த வாக்கியத்தை முடிக்கவில்லை. காதர் ஓடிப்போய் விட்டான். (தொடரும்)




அவதாரங்களுக்குள் ஒன்று உசத்தி, ஒன்று தாழ்த்தி என்று கிடையாது. காவேரியில் எங்கே குளித்தாலும் காவேரிதானே? ஆனாலும் அதுவே மைசூர் ராஜ்யத்திலிருந்து தமிழ்த் தேசத்தைத் தொடுகிற இடத்தில் மேகேதாடு என்ற இடத்தில் ஓர் ஆடு தாண்டுகிற அளவுக்குக் குறுகலாக இருக்கிறது. (கன்னட பாஷையில் 'மேகே' என்றால் மேஷம், அதாவது ஆடு. 'தாடு' என்றால் தாண்டுவது.) ஸ்ரீரங்கத்துக்கு வந்து சேர்கிறபோதோ ''அகண்ட காவேரி'' என்று ஒரு கரையிலிருந்து எதிர்க் கரை தெரியாமல் ஒரே பிரவாஹமாயிருக்கிறது. இப்படி ஒரே பகவான்தான் தசாவதாரமும் பண்ணினான் என்றாலும் ஒவ்வொன்றிலும் தன் சக்தியை ஒரே மாதிரிக் காட்டாமல் வித்யாஸமாகக் காட்டுகிறான். நரஸிம்ஹமூர்த்தியாக மகா சக்தியைக் காட்டினாலும் அந்த அவதாரம் ரொம்பவும் ஸ்வல்ப காலமே இருந்தது. ஸ்ரீ ராமசந்திர மூர்த்தியாக வந்தபோது மனுஷ்யர் மாதிரியே பிறந்து வளர்ந்து அநேக வருஷங்கள் லோகத்திலிருந்தாலும், தெய்வ சக்தியை எல்லாம் அடக்கிக் கொண்டு எல்லா ஜனங்களிலும் தான் ஒருத்தன், ஸத்ய-தர்மங்களில் அவர்களுக்கெல்லாம் 'ஐடியலா'க இருந்த பரம ஸ்ரேஷ்டனானாலும், மஹா வீர தீர பராக்ரமனாக இருந்தபோதிலும், மனுஷ்யர்களில் ஒருத்தன்தான் என்றே காட்டிவிட்டுப் போனார். ராவண ஸம்ஹாரத்துக்குப் பின் ஸீதை அக்னிப் பிரவேசம் செய்தபோது தேவர்களெல்லாரும் வந்து, ''நீ நாராயணன் இல்லையா? ஸீதை ஸாக்ஷாத் மஹாலக்ஷ்மி இல்லையா?'' என்று ஞாபகப்படுத்தினபோது அவர், ''ஆத்மானம் மானுஷம் மன்யே, ராமம் தசரதாத்மஜம்'' — ''நான் தசரதன் பிள்ளையான மனுஷ்ய ராமன் என்றே என்னை வைத்துக்கொண்டிருக்கிறேன்'' என்று சொல்லிவிட்டார்!

ஆனால் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவோ ஸ்ரீராமர் போலவே அநேக வருஷங்கள் இந்த லோகத்தில் மனுஷ்யர் மாதிரிப் பிறந்து வளர்ந்து வாழ்ந்திருந்தாலும் அதே சமயத்தில் தெய்வத் தன்மையையும் அபார சக்தியோடு நரஸிம்ஹ மூர்த்தியைப் போலக் காட்டியிருக்கிறார். அவர் அவதாரம் பண்ணின உடனேயே காராக்ருஹக் கதவுகளைத் தாமாகத் திறந்து கொள்ளப் பண்ணினார்; யமுநாப் பிரவாஹத்தை வழி விடுமாறு செய்தார். அதி பால்யத்திலேயே பூதனை, சகடாஸுரன், திருணாவர்த்தன், பகாசுரன், தேநுகாஸுரன் என்று பலரை அநாயாஸமாக ஸம்ஹாரம் பண்ணினார். இந்தப் பராக்ரமத்துக்குத் தன் காருண்யம் சளைத்ததில்லை என்று கோ, கோப, கோபிகளை ரக்ஷிப்பதற்காகக் குட்டி விரலில் கோவர்த்தன கிரியை ஏழு நாள் தூக்கி நிறுத்தி இந்திரனைத் தன் காலில் வந்து விழும்படி பண்ணினார்.

இந்த அவதாரத்திலே மஹா திவ்ய சக்திகளைக் காட்டும்போது மநுஷ்யரோடு மநுஷ்யராக அவர்கள் மாதிரியே இருந்தும் காட்டினது ஒரு பெரிய விசேஷம். இப்படி மநுஷ்ய ரீதியிலேயே கிருஷ்ணர் சின்ன வயஸில், கம்ஸ வதத்துக்கு அப்புறம் ஸாந்தீபனி என்ற வேத வித்திடம் குருகுல வாஸம் பண்ணி வித்யைகளை அப்யஸித்தார். காட்டிலே அலைந்து குருவுக்கு ஸமித்து (யக்ஞத்துக்கான சுள்ளி) சேகரித்து வருவது முதலான காரியங்களைப் பண்ணினவரே, அப்புறம் படிப்பு முடிந்து குரு தக்ஷிணை தரும்போது தம் ஈச்வர சக்தியைக் காட்டினார். ஸாந்தீபனியின் குமாரன் வெகு காலம் முந்தி ஸமுத்திரத்தில் மூழ்கிச் செத்துப் போய்விட்டான். இப்போது பாலகிருஷ்ணன் என்ன செய்தாரென்றால் யம லோகத்துக்கே போய் யமனுக்கு ஆக்ஞை போட்டு, செத்துப் போன அந்தப் பிள்ளையின் உயிரை மீட்டுக் கொண்டு வந்து, குரு தக்ஷிணையாக ஸாந்தீபனிக்குக் கொடுத்தார். (தொடரும்)

# கோபம் பொல்லாதது

லக்ஷ்மி ரமணன்

சின்ன விஷயம்தான். ஆனால் அது பெரிய உருவம் எடுத்துக் கொண்டு விட்டது. நெருப்புப் பொறியே தீயானதைப் போன்று.

கோபால் அன்று மாலை ஏழு மணிக்கு அலுவலகத்திலிருந்து திரும்பினான் என்பதுதான் காரணம்.

''அடேடே! ஏது இத்தனை சீக்கிரம்? வழக்கமாக ஒன்பது மணி வரை இருந்து ஃபைல்களுக்கெல்லாம் தாலாட்டுப் பாடித் தூங்க வைத்துவிட்டுத்தானே வருவீர்கள்'' என்றாள் மஞ்சு கிண்டலாக. கடந்த சில தினங்களாகவே கோபால் ஆபீசிலிருந்து திரும்புவது நேரமாயிற்று. அகில இந்திய பொறி இயல் மகாநாடு ஒன்று நடந்து கொண்டிருந்ததால் வேலை அதிகமாக இருந்தது. மஞ்சு அதைப் புரிந்து கொள்ள முடியாத அளவுக்கு முட்டாள் அல்ல. ஆயினும் அவனைக் கொஞ்சம் சீண்டிப் பார்க்க வேண்டும் என்று அவளுக்கு ஆசையாக இருந்தது. சுடச் சுட ஒரு பிளேட் சிற்றுண்டியும் ஒரு கப் காப்பியும் களைப்பாக வந்தவனுக்குக் கொடுத்து விட்டுப் பின்னர் சீண்டியிருந்தால் ஒருவேளை அது விபரீதத்தில் முடிந்திருக்காதோ என்னவோ. அலுத்துச் சலித்து வந்தவனை அப்படியே நிறுத்தி வம்புக்கு இழுத்த பொழுது அவனுக்குக் கோபம் வரத்தான் செய்தது.

''எட்டு மணியோ ஒன்பது மணியோ இந்த மட்டும் ஆபீசிலிருந்து நேரே வீட்டுக்கு வந்து சேருகிறேனென்று சந்தோஷப்படு. ஒவ்வொருத்தன் ஆபீஸையே தான் தாங்கிண்டு நிக்கற மாதிரி பெண்டாட்டி கிட்டே நடிச்சுண்டு என்ன கூத்தெல்லாம் அடிக்கிறான் தெரியுமா? என் பிரெண்ட் ஹரிபாதி நான் ராத்திரி வீட்டுக்கே போறதில்லே.'' கோபால் அதைச் சொன்னபோது அவன் முகத்தில் படர்ந்தது அவர்களைக் கண்டு மனசுக்குள்ளேயே புழுங்கும் பொருமையா, இல்லே, 'பார்த்தாயா நான் எத்தனை நல்லவன்' என்கிற தற்பெருமையா? அது என்ன என்பதை அவளால் தீர்மானமாகப் புரிந்து கொள்ள முடியவில்லை. பின்னலுக்கு இழை எடுத்ததே தான் என்பது அவளுக்கு மறந்து போயிற்று.

''ஏது பேச்சு மெயின் ரோட்டை விட்டுக் குறுக்கு வழியில் போறது? என்னவோ பயமுறுத்தறேளே. நீங்களும் கூத்தடியுங்களேன். யார் வேண்டாம்னு? இன்னும் அந்தக் குறைதான் உங்களுக்கு எதுக்கு?''

''என்னை அத்தனை தூரத்துக்குக் கட்டவிழ்த்து விடாதே.... ஆண்பிள்ளை மனசு அப்புறம் அடங்காமல் போயிடும்.''

மஞ்சுவுக்கு ஏனோ கோபம் வந்தது.

'கட்டின புடவையை விடக் கடைப் புடவையே உயர்த்தி என்கிற பாணியில் அவன் பேச்சு இருந்ததையே அவளால் ரசிக்க முடியவில்லை. இன்னும் இது மாதிரிக் குறைகள் வேறு அவன் மனசில் இருக்கின்றனவா? அப்படிப் போக வேண்டும் என்றால் போய் அனுபவப்பட்டுப் பார்க்கட்டுமே' என்று தனக்குத்



தானே கேட்டுக் கொண்டு கடுவன் பூனை மாதிரி முகத்தைத் தூக்கி வைத்துக் கொண்டு உள்ளே வந்ததுடன் இரண்டு நாட்களாக அவனுடன் பேசுவதையே நிறுத்தி விட்டாள் மஞ்சு.

**கா**ப்பி டபராவையும் டம்ளரையும் அவள் 'ணக்' என்று மேஜையின் மேல் வைத்துவிட்டு அகன்றது அவன் தலையில் குட்டுவது போல இருந்தது. ரசத்தையும் மோரையும் கொஞ்சம் ஏமாந்தால் இலைக்குப் பதில் தலையிலேயே கொட்டி விடுவாளோ என்று தோன்றியது கோபாலுக்கு. அவன் அப்படி என்ன சொல்லிவிட்டான் என்று 'துர்வாசை' [துர்வாசருக்குப் பெண்பால்] அவதாரம் எடுத்திருக்கிறாள் அவனுக்குப் புரியவில்லை.

பெண்ணுக்கு ஆண் சளைத்தவனா? அவளுக்கே அத்தனை கோபம் வருமாம். அவனுக்கு வரக் கூடாதா? கோபம் பொத்துக் கொண்டு வந்தபோது சாப்பிடும் தட்டு பிளேயிங் சாஸராயிற்று. கதவுகளைப் படீரென்று அறைந்து மூடிய வேகத்தில் பூகம்பம் வந்தது போல் வீடே ஆடியது. ஆக மொத்தத்தில் வீட்டில் போர்க் களை கட்டிவிட்டது!

அவளுக்குத்தான் என்ன ஆணவம்! ''நீங்களும் கூத்தடியுங்களேன். யார் வேண்டாம்னு'' என்றல்லவா சொல்லி விட்டாள். அவன் அப்படியெல்லாம் போய்விட மாட்டான் என்கிற அசட்டுத் தைரியம்தானே அவளை அப்படிப் பேச வைச்சிருக்கணும்? அவள் சொன்னதையே அவன் சவாலாக எடுத்துக் கொண்டால்.... ஒரு முறை பாதை தவறிப் போய் விட்டால் அவன் மீண்டும் மீள முடியாமலே கூடப் போகலாம் என்பதை அவள் உணர்ந்து கொள்ளவில்லை போலும். அவள் நினைத்ததை நடத்திக் காட்டத்தான் போகிறாள். அவளுடைய துடுக்குத்தனத்துக்கு அவளைக் கொஞ்சமாவது அழ வைக்கத்தான் வேண்டும். அந்த அனுபவத்தையும் தான் பார்க்கலாமே.... இந்த மாதிரி விஷயங்களில் அவனுக்கு எதுவும் தெரியாது. ஹரியைக் கேட்டால் சொல்லுவான். டெலிபோன் செய்து பார்த்தபோது ஹரி அன்று ஆபீசுக்கே வரவில்லை என்று தெரிந்தது.. 'அட அதிர்ஷ்டமே.... இன்றைக்குப் பார்த்துத்தானா அவன் லீவு எடுக்க வேண்டும்' என்று அலுப்பாக இருந்தாலும் முயற்சியை விடக் கூடாது என்று எண்ணியவனாய் மாலையில் ஹரியின் வீட்டுக்குப் போனான் கோபால்.

ஹரியின் மனைவி கோபாலை உட்காரச் சொல்லிக் காப்பி கொடுத்து உபசரித்தாள்.




''அவர் டாக்டரைப் பார்க்கப் போயிருக்கார். வந்துடுவார்'' என்றாள்.

பாவம் எத்தனை அடக்கமான பெண். அவள் பெரிய அழகி இல்லை என்றாலும் பார்க்க அவலட்சணமில்லை. குணவதியாகவும் இருக்கிறாள். அப்படி இருந்தும், தன்னைக் கேட்காமல் தன் தந்தை அந்தக் கல்யாணத்தை நிச்சயித்து நடத்திவிட்டார் என்று கோபித்துக் கொண்டு ஹரி அவள் முகத்தைக்கூட நிமிர்ந்து பார்க்காமல், எடுத்ததற்கெல்லாம் எரிந்து விழுந்து கொண்டு, இரவு வேளைகளில் வீட்டுக்கே வராமல் கண்ட இடங்களைத் தேடிப் போய்க் கொண்டு எத்தனை ஆட்டம் போடுகிறான்....

''ஹல்லோ கோபால்!''

நட்புரிமையோடு குரல் கொடுத்துக் கொண்டு வந்தது யார் என்பது அவனுக்குப் புரியவில்லை.

''வந்து ரொம்ப நேரமாச்சா?'' கேள்வியிலிருந்து வந்தவன் ஹரிதான் என்பது புரிந்தது.

''என்னப்பா இது? கைகால் முகம் எல்லாம் அடையாளமே தெரியாமல் வீங்கிக் கிடக்கு.... உனக்கு என்ன உடம்பு?'' என்றான் கோபால் அதிர்ச்சியடைந்தவனாக.

ஹரி அவனை நெருங்கி உட்கார்ந்தபோது கூட அவனுக்கு எப்படியோ இருந்தது.

''என்னத்தைச் சொல்ல. எல்லாம் என் மடத்தனம். அப்பா மேலே வந்த கோபத்தைப் பெண்டாட்டி மேலே காண்பிக்க நினைச்சு நான் கெட்டு அலைஞ்சதுக்குத் தண்டனை இது. இத்தனை நடந்தும் அவள் என்னன்னு ஒரு வார்த்தை அதிர்ந்து கேட்கலை. அதுவே என் மனசைக் குடையறது. புராணங்களிலேதான் இது மாதிரி பத்தினிகள் இருந்ததாகக் கதை சொல்லுவாங்க. இந்த யுகத்துலேயும் இப்படிப் பொறுமையா இருக்கிற பெண் இருக்கான்னு நினைச்சா ஆச்சரியமா இருக்கு. அவளுக்குப் புருஷனா இருக்க எனக்குத்தான் தகுதி இல்லே....''

ஹரியின் கண்கள் பனித்தன.

திடுக்கிட்ட கோபால் எழுந்து நின்றான்.

''அது சரி... என்ன விஷயம்? வந்ததும் புறப்படறே?'' — ஹரி கண்களைத் துடைத்துக்கொண்டே கேட்டான்.

''ஒண்ணுமில்லே. பார்த்து ரொம்ப நாளாச்சேன்னு வந்தேன்'' என்று ஒரு பொய்யைச் சொல்லிவிட்டுக் கிளம்பிய கோபால் தனக்குள் நினைத்துக் கொண்டான். 'ஹரி நல்ல வேளை. நீ என் கண்களைத் திறந்தாய். நான் செய்யவிருந்த காரியத்தின் பலா பலன்களை முன்பே உணர்த்தி விட்டதற்கு ரொம்ப நன்றி.'

வீடு திரும்பியபோது மஞ்சு பழைய புன்னகையுடன் தன்னை வரவேற்றது கோபாலுக்கு வியப்பை அளித்தது. 'மூட்' மாறி விட்டது போலும் என்று நினைத்தான். மஞ்சு கடை வீதிக்குப் போய் வரும் வழியில், கோபால் ஹரியின் வீட்டுக்குள் நுழைந்ததைப் பார்த்துவிட்டதுதான் அந்த மாற்றத்துக்குக் காரணம் என்பது அவன் அறியாத ரகசியம்!

# கடல் ராணி

## சாண்டில்யன்

**முன் இதழில்...**

புலர்ந்து புலராப் போதினிலே கடல் அலைகளுடன் போராடியவாறு அழகி யொருத்தி நீந்தி விளையாடிக் கொண்டிருக்கிறாள், சிந்துதுர்க்கத்தை யொட்டிய கடலிலே. மலைகள் மண்டிக் கிடந்த அந்தக் கடற்கரையில் ஒரு சிறு கட்டிடம் இருந்தது. உடை மாற்றிக் கொள்ள அங்கு போனவள், கந்தலாடையும் கண்களில் உறக்கமுமாக ஓர் இளைஞன் வாசல் கதவுக்கு நேராகத் தனது கட்டிலில் படுத்துக் கிடப்பதைக் காண்கிறாள். அவன் அவளுடைய ஆடைகளையே சுருட்டித் தலைக்கு உயரம் வைத்துக் கொண்டிருக்கிறான். கோபத்துடன் அவனை உசுப்பி வெளியேற்றி விட்டு, உள்ளே போகிறாள். இந்த நிலையில் இரு வெள்ளையர் அந்தக் கட்டிடம் நோக்கி வருகின்றனர். அவர்கள் துப்பாக்கியை நீட்டி, அவளை மிரட்டி, "இன்று எங்களிட மிருந்து நீ தப்ப முடியாது; எங்களுடன் வந்து தான் ஆக வேண்டும்" என்கின்றனர். கந்தலாடை வாலிபனையும் உதைத்து அவமதிக்கின்றனர். அப்போது தூங்குமூஞ்சி, சோம்பேறி என்று அவள் கருதிய அந்த இளைஞன் துரிதமாக இயங்குகிறான். அவன் துப்பாக்கி வெடிக்க, ஒரு வெள்ளையன் கரத்திலிருந்த துப்பாக்கி எகிறி விழுகிறது. மற்றொருவன் முழங்காலைப் பற்றிக் கொண்டு வலி தாங்காது நொண்டியாட்டம் போடுகிறான். வெள்ளையர்கள் அந்த அழகு மங்கையைக் "கடல் ராணி" என்று அழைக்க இளைஞன் வியக்கிறான்...

இனி மேலே தொடருங்கள்.....

### அத்தியாயம் 2

## சிகிச்சையும் அதிர்ச்சியும்

புகழ் என்பது மனித வாழ்க்கையில் ஏற்படும் ஒரு பிரமை. எந்த மனிதனும் தனக்கு ஏதோ தனி சக்தி இருப்பதாகவும் அதனால் தன் புகழ் ஓங்கியிருப்பதாகவும் நினைக்கிறான். ஆனால் ஒவ்வொருவன் புகழுக்கும் அளவிருக்கிறது, காலம் இருக்கிறது. சிலர் புகழ் வீட்டோடு தங்கிவிடுகிறது. இன்னும் சிலரது புகழ் அவர்கள் உள்ள பிராந்தியத்தோடு நின்று விடுகிறது. அப்படி ஏற்படும் பிராந்தியப் புகழ் கூட அவன் காலத்துடன் மலையேறி விடுகிறது. நில வரம்புக்குள் அடங்காத, காலத்தில் கட்டுக்குள் வராத புகழை வெகு சிலரே அடைகிறார்கள். அவர்கள் உலகத்துக்கு நன்மை செய்வதற்கே வாழ்க்கையை அர்ப்பணித்த மகான்களாகவும் மகா வீரர்களாகவும் விளங்குகிறார்கள். அவர்கள் புகழை வெறும் பிரமை என்று உணர்ந்து அதிலிருந்து விலகப் பார்க்கிறார்கள்- அவர்களைப் புகழ் விடுவதில்லை. சிலர் புகழைச் சம்பாதிக்கப் பார்க்கிறார்கள்; புகழ் அவர்களை அணுகுவதில்லை.

கடல் ராணி புகழை நாடவில்லை. அதை விலக்கவும் பல வகையில், பல ஆண்டுகள் முயன்றாள். ஆனால் அவள் கையாண்ட முறைகள் எல்லாம் பயனற்றுப் போயின. சொந்தப் பெயரை மாற்றிக் கொண்டாள் பலமுறை. சொந்தப் பெயர்தான் மாறியதே யொழிய கடல் ராணி என்ற பெயர் மட்டும் மாறவில்லை. பல வேடங்களில் பல இடங்களில் தோன்றியிருக்கிறாள். எந்த வேடமும் அவளை மறைக்க முடியவில்லை. அவள் கண்களைப் பார்த்தவர்கள் அவளை உடனடியாகக் கண்டு பிடித்துக் கொண்டு, "அவள்தான், அவள்தான்." என்று பேசிக் கொண்டார்கள். அந்தக் கண்களில் வேறு யாருக்கும் இல்லாத ஏதோ ஒரு கவர்ச்சி ஒரு புதுமை இருந்தது. ஊனக் கண்கள்தான் என்றாலும் அவை ஞானக் கண்களாக யாரையும் எவரையும் அலைக்கும் ஆற்றல் பெற்றிருந்தன. அவற்றில் அச்சத்தை யாரும் எப்பொழுதும் பார்த்ததில்லை.

இத்தகைய புகழ் பெற்றவளின் பெயரைச் சொல்லியும் கூடக் கதவின் பக்கத்தில் சாய்ந்திருந்தவன் மிரள மிரள விழித்ததைக் கண்ட முதல் வெள்ளையனின் கோபம் உச்ச ஸ்தாயியை அடைந்து கொண்டிருந்தது. அந்தச் சமயத்தில் "கடல் ராணி என்றால் யார்?" என்று மீண்டும் அந்தச் சோம்பேறி

கேட்கவே அந்த வெள்ளையன் வெடித்தான்: ''கடல் ராணி என்றால் உனக்கு உண்மையாகத் தெரியாது?'' என்று.

''தெரியாது'' என்று பரம பவ்யத்துடன் ஒப்புக்கொண்ட அந்த வாலிபன் கதவுக்குப் பக்கத்துச் சுவரில் மீண்டும் சாய்ந்து கொண்டான்.

அதுவரை ரவை பாய்ந்த முழங்காலைப் பிடித்து நொண்டி யடித்துக் கொண்டிருந்தவன் சிறிது நிதானித்துத் தனது கண்களை அந்த வாலிபன் மீது நாட்டி, ''நீ இந்த உலகத்தைச் சேர்ந்தவன்தானா?'' என்று வினவினான், கண்களில் தெரிந்த கொடுமை சொற்களிலும் விரிய.

இதைக் கேட்ட வாலிபன் சாய்ந்த நிலையிலேயே புன்முறுவல் காட்டி ''வேறு உலகத்துக்குப் போக இன்னும் காலம் இருக்கிறதென்று நினைக்கிறேன்'' என்று பதில் சொன்னான் சர்வ சாதாரணமாக.

முதல் வெள்ளையன் உக்கிரகாரமாக மாறி ''இவன் சுத்த அயோக்கியன்'' என்று கூவினான் தனது நண்பனை நோக்கி.

''இவனைச் சேர்ந்தவனாக இருக்க வேண்டும்'' என்றான் நொண்டி.



அதுவரை மௌனமாக அந்த நாடகத்தையும் உரையாடலையும் கேட்டுக்கொண்டு நின்றிருந்த கடல் ராணி ''இவரை இதற்கு முன்பு நான் பார்த்ததில்லை'' என்றாள் சிறிதும் சலனமற்ற குரலில்.

முதல் வெள்ளையன் குருதி வழிந்து கொண்டிருந்த தனது கையை இன்னொரு கையால் இறுக்கிப் பிடித்துக் கொண்டான். ரத்தத்தை நிறுத்தும் நோக்கத்துடன். அந்த நிலையில், காயத்தால் ஏற்பட்ட வேதனையில், வேதனை அளித்த வெறியில் வினவினான், ''இவன் இந்தக் கட்டிடத்தில்தானே இருந்தான்?'' என்று.

''ஆம்.'' மிக அலட்சியமாக வந்தது கடல் ராணியின் பதில்.

நொண்டி வினவினான்: ''எங்களை இவன் தானே சுட்டான்?'' என்று.

''அப்படித்தான் இருக்க வேண்டும்'' என்றாள் கடல் ராணி புன்முறுவல் பூத்து.

''அப்படித்தானிருக்க வேண்டும் என்றால் என்ன பொருள்?'' முதல் வெள்ளையன் வினவினான் மூர்க்கமாக.

''சுட்டதை நான் பார்க்கவில்லை'' என்றாள் அவள்.

''நானும் பார்க்கவில்லை'' என்றான் கையில் காயமடைந்தவன்.

''என்னிடம் துப்பாக்கி இல்லை'' என்று கடல் ராணி தனது இடுப்பைத் தொட்டுக் காட்டினாள்.

''அதனால்?'' நொண்டியின் கேள்வி உக்கிரமாக வந்தது.

''என்னிடம் துப்பாக்கி இல்லை. உங்கள் கையிலும் காலிலும் ரவை பாய்ந்திருக்கிறது. தவிர....'' இந்த இடத்தில் பேச்சை நிறுத்தி விஷம நகை காட்டினாள் கடல் ராணி.

''தவிர?'' என்றான் முதல் வெள்ளையன்.

''உங்களை நீங்களே சுட்டுக் கொண்டிருக்க மாட்டீர்கள்'' என்று ராணி சுட்டிக் காட்டினாள்.

''இதை ஊகிக்கப் பெரிய அறிவு தேவையில்லை'' என்றான் நொண்டி.

''தேவையில்லை. அதனால் நீங்களே ஊகித்திருப்பீர்கள் என்று நினைத்தேன்., நீங்கள் ஊகிக்காததால் நான் ஊகித்தேன்'' என்ற கடல் ராணி மெல்ல நகைத்தாள்.

இந்த உரையாடலைக் கேட்ட அந்தச் சோம்பேறி நகைக்கவுமில்லை, வேறு எந்த வித அக்கறையைக் காட்டவுமில்லை. எதையோ நினைத்துக் கொண்டு மெல்ல எழுந்தான், உட்கார்ந்த நிலையிலிருந்து. அவன் எழுந்ததும் நொண்டி தனது கையிலிருந்த துப்பாக்கியை நீட்ட முயன்றதைக் கண்ட சோம்பேறி ''துப்பாக்கியை இடையில் சொருகிக்கொள்ளுங்கள். உங்களைக் கொல்ல நான் விரும்பவில்லை'' என்று கூறி எதிரி நீட்டிய துப்பாக்கியை லட்சியம் செய்யாமல் அவனருகே சென்று அவன் கைத் துப்பாக்கியைப் பிடுங்கி அவன் பெல்ட்டில் அழுத்திச் சொருகினான். பிறகு அவன் காலடியில் உட்கார்ந்து கால் காயத்தைப் பரிசோதித்தான். அடுத்தபடி முதல் வெள்ளையனிடம் சென்று அவன் கையை நன்றாகத் திருப்பிக் காயத்தைப் பார்த்தான். கடைசியாகக் கடல் ராணியை நோக்கித் திரும்பி, ''பெண்ணே! அந்த முழங்கால் காயம்



பாதகமில்லை. இந்தக் கைக் காயம் அபாயமானது. ரவை உள்ளே பாய்ந்து ரத்தக் குழாய்களில் பதிந்திருக்கிறது. உடனடியாக சிகிச்சை செய்யா விட்டால் ரத்தம் வழிந்தே இவன் பிராணனை விடுவான்'' என்று கூறிவிட்டு, வெள்ளையனை நோக்கி, ''மன்னிக்க வேண்டும். உங்களைக் கொல்ல நான் விரும்பவில்லை. லேசாகக் காயப்படுத்தத்தான் முயன்றேன். குறி சிறிது தவறி விட்டது'' என்றான்.

''குறி' தவறி விட்டதா?'' வெள்ளையன் பிராண பயத்திலும் வியப்பைக் காட்டினான்.

''ஆம். நான் குறிவைத்தது துப்பாக்கிக்கு. ஆனால் ரவை உங்கள் கையில் பாய்ந்துவிட்டது. சென்ற பத்து நாட்களாகத் துப்பாக்கி பயிலாத தவறு'' என்று மிகவும் வருத்தம் தோய்ந்த குரலில் கூறிய அந்த வாலிபன் வெள்ளையனை விட்டுக் கடல் ராணியை நோக்கினான். ''உள்ளே ஏதாவது துணி இருந்தால் கொண்டுவா'' என்று உத்தர விட்டான்.

விநாடிக்கு விநாடி கடல் ராணியின் வியப்பு அதிகப்பட்டுக் கொண்டிருந்ததால் அவள் இருந்த இடத்தை விட்டு அசையவுமில்லை, பதில் கூறவுமில்லை. அவள் பதில் கூறாமல் கற்சிலையாகி விட்டதைக் கண்ட அந்த வாலிபன், ''கடல் ராணியாம் கடல் ராணி'' என்று முணு முணுத்துக் கொண்டு உள்ளே சென்று புத்தம் புதுச் சேலை யொன்றை எடுத்து வந்து அதன் முந்தானையை நீட்டம் நீட்டமாகக் கிழித்தான். பிறகு இரு வெள்ளையர்களையும் பார்த்து, ''நீங்கள் குடிக்கும் பழக்கம் உண்டா?'' என்று வினவினான்.

''உண்டு'' என்றான் முதல் வெள்ளையன்.

''பையில் குப்பி இருக்கிறதா?'' வாலிபன் கேள்வியுடன் அவன் பையையும் கவனித்தான். அது சற்றுப் புடைத்திருந்ததைக் கண்டு, ''ஓகோ இருக்கிறதா? நல்லது'' என்று கூறிய வண்ணம் அவன் பையிலிருந்த பாட்டிலை எடுத்து அதன் கார்க்கை நீக்கி அதிலிருந்த விஸ்கியை வெள்ளையன் கைக் காயத்தில் ஊற்றினான் சிறிது. அதன் எரிச்சல் அளித்த இம்சையால் பல்லைக் கடித்து முகத்தையும் சுளித்துக் கொண்ட வெள்ளையனை நோக்கிய வாலிபன், ''இது தாற்காலிகமாக ரத்தப் பிரவாகத்தை நிறுத்தும். ரவையை அப்புறம் எடுக்கலாம்'' என்று சமாதானம் சொல்லிவிட்டுக் கிழித்த புடவையில் ஒரு பகுதியால் காயத்தை நன்றாக இழுத்துக் கட்டியதன்றி கையைக் அசைத்தும் பார்த்தான். ''குட்! வெரிகுட்!'' என்று ஆங்கிலத்திலும் சொன்னான்.

அவன் ஆங்கிலம் பேசுவதைக் கேட்ட அந்த வெள்ளையன் வியப்பு உச்ச நிலைக்குச் செல்லவே அவன் ஏதோ கேட்க முயன்ற சமயத்தில் கையின் சைகையால் அவனை அடக்கிய அந்தச் சோம்பேறி விஸ்கி பாட்டிலுடன் மிக மெதுவாக நொண்டியடித்தவனை அணுகி அவன் முழங்கால் காயத்தை விஸ்கியால் அலம்பினான். அலம்பியதும் கடல் ராணியை நோக்கித் திரும்பி, ''பெண்ணே! இப்படி வா'' என்று அழைத்தான்.

அந்த வாலிபனின் ஒவ்வொரு செய்கையையும் கவனித்துக் கொண்டிருந்த கடல் ராணி மெல்ல நடந்து அவனை அணுகினாள். ''இந்தக் கட்டைப் போட உதவி தேவை. துணியின் ஒரு பாதியை நீ பிடித்துக்கொள். நான் முழங்காலில் துணியைச் சுற்றும் போது எதிர்ப்புறமாக முழந்தாளுக்குச் சிறிது மேலும் கீழுமாகச் சுற்றிவா. அப்பொழுதுதான் கட்டு நிற்கும்'' என்றான்.

பதிலுக்கு அவள் தலையை மட்டும் அசைத்துத் துணியின் அவன் கொடுத்த பகுதியைப் பிடித்துக் கொண்டாள். அவனுடன் சேர்ந்து நொண்டிக்குக் கட்டுப் போட்ட பிறகு சிறிது விலகி நின்றாள். வாலிபன் நொண்டியின் காலை இரு முறை அசைத்துப் பார்த்தான். ''இது சரியாயிருக்கிறது. இனி நீ காலை ஊன்றலாம்'' என்றும் கூறிவிட்டு முகத்தில் மகிழ்ச்சியைக் காட்டினான் முதன் முதலாக.

அடுத்து அவன் என்ன செய்ய உத்தேசிக்கிறானென்று மற்ற மூவருக்கும் புரியாததால் மூவர் கண்களும் அவன் மீதே நிலைத்திருந்தன. ஆனால் அந்த வாலிபன் அவர்களைப் பார்க்காமல் பாறைகளில் இறங்கிச் சென்று பாறை மீது மோதிக் கொண்டிருந்த அலை நீரில் கைகளை அலம்பி ரத்தக் கறைகளைப் போக்கிக் கொண்டு திரும்பினான். கைகளைத் தனது சராயில் நன்றாகத் துடைத்துக் கொண்டு ''ராணி! இப்படி அழைப்பது சௌகரியமாக இருக்கிறது'' என்று பேச்சைத் துவங்கி, ''இவர்களை இனி பாண்டவர் கோட்டைக்கு அழைத்துச் செல்வோம்'' என்றும் கூறினான்.

இதைக் கேட்ட ராணி பிரமை பிடித்து நின்றாள் பல விநாடிகள். ''உங்களுக்குப் பைத்தியம் ஏதுமில்லையே?'' என்று வினவினாள்.

''இல்லை யென்று நினைக்கிறேன்'' — வாலிபன் பதில் நிதானமாகவும் திட்டமாகவும் வந்தது.

கடல் ராணியும் எந்தப் பதற்றத்தையும் காட்டா விட்டாலும் சகலரையும் கவர்ந்த தனது காந்த விழிகளை அந்த வாலிபன் மீது நிலைக்க விட்டாள் சில விநாடிகள். அந்தச் சோம்பேறியும் தனது விழிகளை அவன்

''டிரான்ஸிஸ்டர் மேலே இருப்பது நானே தயாரித்த எலிமினேட்டர்!''



விழிகளுடன் கலந்தான் கருணை ஏதுமின்றி. கருணை இல்லாத அந்தக் கண்களில் ஏதோ ஒரு விசித்திர சக்தி இருக்க வேண்டும். கடல் ராணியே தனது கண்களை முதலில் அகற்றினாள் அவன் முகத்திலிருந்து. அத்துடன் கேட்டாள்: ''இவர்களை அங்கு கொண்டு போனால் என்ன ஆகும் என்று தெரியுமா?'' என்று.

''என்ன ஆகும்?'' வாலிபன் கேட்டான் சகஜமாக.

''கொல்லப்படுவார்கள். பாண்டவர் கோட்டையிலும் சரி, சிந்து துர்க்கத்திலும் சரி, இவர்களை அறியாதவர்கள் கிடையாது'' என்றாள் கடல் ராணி.

''அத்தனை பிராபல்யமா?''

''ஆம்.''

''பாதகமில்லை. அழைத்துச் செல்வோம். கையில் காயம் உள்ளவருக்கு உடனடியாகச் சிகிச்சை இல்லாவிட்டால் இறந்து விடுவார்.''

இதைக் கேட்ட நொண்டி ''அதற்காக நாங்கள் இருவரும் சாக வேண்டுமா?'' என்று வினவினான்.

''நண்பனுடன் இறப்பதை விட பாக்கியம் உலகத்தில் என்ன இருக்கிறது?'' என்ற வாலிபன், ''சரி ராணி! இவர்களை அழைத்துச் செல்வோம்!'' என்றான்.

''எப்படி அழைத்துச் செல்வது? இவர்களால் நீந்த முடியாதே'' என்றாள் கடல்ராணி.

''படகில் அழைத்துச் செல்வோம்'' என்றான் வாலிபன்.

''படகு ஏது?'' குழப்பத்துடன் வினவினாள் கடல்ராணி.

''இருக்கிறது வா'' என்ற வாலிபன் மூவரையும் தன்னுடன் வரும்படி சைகை செய்து மலைப் பாறைகளில் இறங்கிச் சென்றான். அடிவாரத்தில் அலை மோதிய இடத்தில் ஒரு படகு தனியில் பிணைக்கப்பட்டிருந்தது. இதைக் கண்டதும் ராணியின் விழிகள் நெருப்பைக் கக்கின. வாலிபனை நோக்கித் திரும்பினாள் மிக மிஞ்சிய சீற்றத்துடன். ''இது என் படகு'' என்றும் கூறினாள் உஷ்ணம் மிதமிஞ்சிய குரலில்.

''இதனை எங்கிருந்து திருடினாய்?'' ராணியின் கண்களில் நெருப்புப் பொறி பறந்தது.

''நீ கட்டி வைத்த இடத்திலிருந்து'' என்றான் அந்த வாலிபன் சர்வ சாதாரணமாக.

ராணியின் கண்களிலிருந்த கோபம் சட்டென்று மறைந்தது. ''நீ யார்?'' என்று மிகுந்த சந்தேகத்துடன் வினவினாள் ராணி.

அந்த வாலிபன் சிறிது தயங்கினான். பிறகு மெள்ள உதடுகளைச் சங்கடத்துடன் அசைத்துத் தனது பெயரை உச்சரித்தான். பெயரைக் கேட்ட ராணி மட்டுமல்ல, மற்ற இருவரும் கூட பிரமிப்பின் உச்ச கட்டத்தை அடைந்தார்கள். ராணியின் பிரமிப்பில் வியப்புக் கலந்திருந்தது. மற்ற இருவர் பிரமிப்பில் அச்சமும் அதிர்ச்சியும் பரவியிருந்தன. அந்த இடத்தில் அவர்கள் யாரை எதிர்பார்த்திருந்தாலும் அந்த வாலிபனை எதிர்பார்க்கவில்லையாதலால் தங்கள் முடிவு காலம் நெருங்கி விட்டதை உணர்ந்து கொண்டார்கள். (தொடரும்)

தபால்காரர் கொடுத்துவிட்டுப் போன கடிதத்தை எடுத்துப் பிரித்துப் பார்த்தாள் மங்களம். கடிதம் கோவைத் தரகர் மாணிக்கத்திடமிருந்து வந்திருந்தது.

அன்புள்ள மாமா, அக்கா அவர்களுக்கு
அநேக நமஸ்காரம்.

கோயமுத்தூரில் ஒரு நல்ல இடம் இருக்கிறது. பூரணியின் ஜாதகத்தைக் கொடுத்தேன். பூரணியின் ஜாதகமும் அந்தப் பையனின் ஜாதகமும் நன்றாகப் பொருந்துகிறது. பையன் ஸ்டேட் பாங்கில் கிளார்க்காக இருக்கிறான். ஒரே பையன். வீடு மற்ற சொத்துக்கள் குறைந்தது இரண்டு மூன்று லட்சம் தேறும். எங்களுக்குக் காசு பணம் வேண்டாம். பெண் நன்றாக இருந்தால் போதுமென்று சொல்கிறார்கள். இது நல்ல இடம். இதை விட்டால் பூரணிக்கு, இதை விட ஒரு நல்ல இடம் கிடைப்பது மிகவும் கஷ்டம். கூடிய விரைவில் மாப்பிள்ளை வீட்டுக்காரர்களை அழைத்துக் கொண்டு வருகிறேன்.

பிரியமுடன், மாணிக்கம்

''என்னுங்க.... உங்களைத்தானே...?'' – கடிதத்தை எடுத்துக் கொண்டு உள் அறைக்குப் போனாள் மங்களம்.

''என்ன மங்களம்?''

மனைவி நீட்டிய கடிதத்தை வாங்கிப் படித்தார் ராமநாதன். நிமிரும்போது முகமெல்லாம் மகிழ்ச்சி பொங்க நிமிர்ந்தார்.

''எனக்கும் இந்த இடம் நல்லாத்தான் படுது மங்களம். என்ன செலவானாலும் பரவாயில்லை. நம்ம பூரணிக்கு இந்த இடத்தை முடித்த பிறகுதான் எனக்குப் பூரண நிம்மதி''! என்றார்.

ஜன்னலருகே நின்றிருந்த பூரணியின் முகம் வெட்கத்தால் 'குப்'பெனச் சிவந்தது.

மகிழ்ச்சியால் அப்படியே வானத்தில் பறப்பதைப் போல் ஒரு பிரமை.

அர்த்த மில்லாமல் தனக்குள் சிரித்துக் கொண்டாள்.

காரிலிருந்து தரகர் மாணிக்கம் உட்பட நாலைந்து பேர் இறங்கினார்கள்.

தரகர் மாணிக்கம் திடுக்கிட்டார். பூரணியின் வீடு பூட்டிக் கிடந்தது.

பக்கத்து வீட்டுக் காமாட்சி, காரின் சத்தம் கேட்டு வெளியே வந்து எட்டிப் பார்த்தாள்.

''காமாட்சி! பூரணி, மங்களம் எல்லோரும் எங்கே போயிட்டாங்க?'' என்று தரகர் மாணிக்கம் கேட்டார்.

''மாணிக்கம் அண்ணே .... உள்ளே வாங்க....''

தரகர் மாணிக்கம் மாப்பிள்ளை வீட்டுக்காரர்களைத் தயக்கத்தோடு பார்த்தார்.

தரகர் மாணிக்கமும் மாப்பிள்ளை வீட்டுக்காரர்களும் உள்ளே நுழைந்தார்கள்.

''உட்காருங்க!'' – காமாட்சி ஒரு சோபாவைக் காட்டினாள். எல்லோரும் உட்கார்ந்தார்கள்.

''பூரணி, மங்களம் அக்கா எல்லோரும் எங்க போயிட்டாங்க?''

''ஒரு கல்யாணத்துக்காக வெளியூர் போயிருக்காங்க. நாளைக்குத்தான் வருவாங்க'' என்றாள் காமாட்சி.



மாப்பிள்ளை வீட்டுக்காரர்களின் முகம் வாடிவிட்டது. எழுந்து கொண்டார்கள்.

''சரி, நாங்க புறப்படறோம். அவங்க வந்தாங்கன்னு நாங்க வந்துட்டுப் போனதாச் சொல்லுங்க....''

''என்னங்க.... இவ்வளவு தூரம் வந்துட்டு ஒரு காப்பி கூடச் சாப்பிடாமப் போறீங்க? உட்காருங்க. காப்பி சாப்பிட்டு விட்டுப் போகலாம். மாணிக்கம் அண்ணே நீங்களும் உட்காருங்க'' என்றாள் காமாட்சி.

மீண்டும் தயக்கத்துடன் எல்லோரும் உட்கார்ந்தார்கள்.

''மல்லிகா.... காப்பி போடும்மா...'' என்று காமாட்சி குரல் கொடுத்துக் கொண்டே உள் அறைக்குப் போனாள்.

''என்னங்க... நீங்க இங்கயா இருக்கீங்க?''

''ஏன் காமாட்சி?'' மனைவியை நிமிர்ந்து பார்த்தார் சதாசிவம்.

''பூரணியைப் பெண் பார்க்க வந்திருக்கும் மாப்பிள்ளையைப் பார்த்தீங்களா?''




''பார்த்தேனே? நீதான் விருந்துக்குக் கூப்பிட்டு இருக்கியே?''

''நான் அதையா கேட்டேன்? பையன் எப்படின்னு கேட்கிறேன்.''

''மாப்பிள்ளைக்கென்ன? கண்ணுக்கு லட்சணமா இருக்கான். ஸ்டேட் பாங்கிலே கை நிறையச் சம்பளம். மனசு நெறைஞ்ச சொத்து...''

''இந்த மாப்பிள்ளை நம்ம மல்லிகாவுக்கு வாய்த்தால் எப்படி இருக்கும்?''

சட்டென்று நிமிர்ந்தார் சதாசிவம். எரிச்சலோடு காமாட்சியைப் பார்த்தார்.

''உனக்கென்ன பைத்தியமா?... என்ன உளர்றே?''

''உளறலீங்க. இன்னும் உங்களுக்குப் புரியலியா? பூரணி மேலும் மங்களம் குடும்பத்தின் மேலும் ஏதாவது இசகு பிசகு சொல்லி இந்த மாப்பிள்ளை வீட்டுக்காரர்களுக்கு அவங்க மேல் வெறுப்பு ஏற்படச் செய்து.... அவங்களை நம்ப பக்கம் இழுத்து நம்ம மல்லிகாவுக்கு இந்த வரனை முடிச்சுடலாம்..... என்ன சொல்றீங்க?''

'பளார்' என்று விழுந்த அறையில் தூரப் போய் விழுந்தாள் காமாட்சி.

''ஒரு பொண்ணு மேலே பழியைச்சுமத்தி நம்ம பொண்ணுக்கு ஒரு நல்ல வாழ்க்கையைத் தேடணுமா? உனக்கு ஏண்டி புத்தி இப்படிப் போகுது?''

சிவந்த கன்னத்தை ஒரு கையால் பிடித்துக் கொண்டு எழுந்தாள் காமாட்சி.

''நான் எனக்காகவா சொல்றேன்...நம்ம பொண்ணோட நல்லதுக்குச் சொல்றேன். அவ வாழ்க்கை நல்லா இருக்கணும்னு சொல்றேன்....''

சதாசிவம் குழம்பிப் போய்க் காமாட்சியைப் பார்த்தார்.

''சரி.... உன் இஷ்டம் போல் செய்...''

அவசரம் அவசரமாகப் புடவைத் தலைப்பால் கண்களைத் துடைத்துக் கொண்டு முன் அறைக்கு வந்தாள்.

''மாணிக்கம் அண்ணே..... கொஞ்சம் இப்படி வாங்க....''

தயக்கத்தோடு மாப்பிள்ளை வீட்டுக்காரர்களைப் பார்த்துவிட்டு எழுந்து போனார் தரகர் மாணிக்கம்.

''மாணிக்கம் அண்ணே.... தப்பா நினைக்கக் கூடாது. இந்த இடத்தை என் மகள் மல்லிகாவுக்கு முடிச்சுக் கொடுத்தீங்கன்னு?...'' என்று மெதுவாக இழுத்தாள் காமாட்சி அம்மாள்.

தரகர் மாணிக்கம் கோபத்தோடு காமாட்சியைப் பார்த்தார்.

தன் இடுப்பிலிருந்த சாவிக் கொத்தை எடுத்துப் பீரோவைத் திறந்தாள். ஒரு பத்து ரூபாய்க் கட்டை எடுத்துக் கொண்டு பீரோவை மூடினாள். ''இந்தா மாணிக்கம் அண்ணே.... இதுலே ஆயிரம் இருக்கு. மல்லிகாவுக்கு இந்த வரனை முடித்துக் கொடுத்தீங்கன்னு இன்னும் ஆயிரம் தர்றேன்....'' பணத்தைத் தரகர் மாணிக்கத்தின் கையில் திணித்தாள் காமாட்சி.

பணத்தைப் பார்த்தார் தரகர் மாணிக்கம். இலேசாக வியர்த்தது.

''வந்து.... காமாட்சி.... என்ன காரணத்தைச் சொல்லி அவங்களை நிராகரிப்பது?'' என்று தயக்கத்தோடு கேட்டார்.

''பூரணியைப் பற்றியும், மங்களத்தின் குடும்பத்தைப் பற்றியும் கொஞ்சம் மாற்றிச் சொல்லி.... காரியத்தை முடிக்கலாமே?''

தரகர் மாணிக்கம் யோசித்தார்.

''என்னண்ணே யோசிக்கிறீங்க?''

''சரி....காரியத்தை முடிச்சுப்புடறேன்!''

முன் அறைக்கு வந்த மாணிக்கம் மாப்பிள்ளை வீட்டுக்காரர்களின் காதில் கிசுகிசுத்தார்.

எல்லோரின் முகமும் மாறியது. ''நிஜமாகவா சொல்றீங்க?'' —ஒரே குரலில் கூவினார்கள்.

''சரியா விசாரிக்காம ஏற்பாடு செய்தது என் தப்புங்க. என்னை மன்னிச்சுக்குங்க.'' தரகர் மாணிக்கம் வருத்தத்தோடு மாப்பிள்ளை வீட்டாரிடம் மன்னிப்புக் கேட்டார்.

காமாட்சி காப்பியோடு வந்தாள்.

''இருங்க.... காப்பி சாப்பிட்டுட்டுப் போங்க....''

''எங்களுக்குக் காப்பியும் வேண்டாம்.... ஒரு மண்ணும் வேண்டாம்.'' எல்லோரும் புறப்பட்டார்கள்.

''இப்படி இருக்கும்னு நான் நினைக்கலைங்க. நம்மை இப்படி அவமானப் படுத்தினவங்க மூஞ்சியிலே கரியைப் பூசாமல் விடக் கூடாது'' என்று கோபத்தோடு சொன்னார் தரகர் மாணிக்கம்.

மாப்பிள்ளை வீட்டுக்காரர்கள் புரியாமல் அவரைப் பார்த்தார்கள்.

---

### எடுக்காமல் வந்தது ஏனோ?

நான்கு வயது மோகனைக் கூட்டிக் கொண்டு அவன் தாயார் தன் உறவினர் குடும்பத்தில் புதிதாகப் பிறந்திருக்கும் குழந்தையைப் பார்க்கச் சென்றாள். போன இடத்தில் குழந்தைக்கு என்று ஒரு பத்து ரூபாய் நோட்டை அன்பளிப்பாகக் கொடுத்தாள்.

திரும்பி வரும்போது மோகன் தாயாரைப் பார்த்துக் கேட்டான். ''என்னம்மா! குழந்தைக்குன்னு பத்து ரூபாயைக் கொடுத்து விட்டுக் குழந்தையை எடுத்துக்கிட்டு வராம மறந்து போய்த் திரும்பறியே! அன்னிக்கும் இப்படித்தான் மார்க்கெட்டிலே கீரைக்காரி கிட்டே காசைக் கொடுத்துட்டுக் கீரைக் கட்டை எடுத்துக்கிட்டு வராமலேயே வீட்டுக்கு வந்துட்டே!'' என்றான்.

மேனு.



''ஒரு வீட்டுக்கு விருந்துக்குப் போறோம்: அந்த வீட்டு விருந்து நமக்கு ஒத்து வரலேன்னு பட்டினியோடவா திரும்புவோம்? பக்கத்து ஹோட்டல்லே ஏதாவது சாப்பிட்டுப் பசியாறிவிட்டுத்தானே திரும்புவோம்?''

மாப்பிள்ளையின் தந்தை கேட்டார்: ''நீங்க என்ன சொல்றீங்க?''

''காமாட்சியும் மங்களத்தோட உறவுக்காரங்கதான். அவங்களுக்கும் ஒரு பெண் இருக்கு. பெண்ணைப் பாருங்க. புடிச்சா ஏற்பாடு பண்ணுங்க. இல்லேன்னு புறப்படுவோம்...''

எல்லோரும் சம்மதத்தோடு உட்கார்ந்தார்கள்.

காமாட்சி எல்லோருக்கும் காப்பி கொடுத்தாள்.

''காமாட்சி! சீக்கிரம் பெண்ணைக் கூட்டிக்கிட்டு வா....'' — தரகர் மாணிக்கம் அவசரப்படுத்தினார்.

மல்லிகாவுக்கு அலங்காரம் செய்து அழைத்துக்கொண்டு வந்தாள் காமாட்சி.

வெட்கம் முகத்தைக் குங்குமச் சிவப்பாக்க எல்லோரின் காலிலும் விழுந்து எழுந்தாள் மல்லிகா.

மாப்பிள்ளை வீட்டுக்காரர்களின் முகத்தில் திருப்தி நிலவியது.

''என்ன செல்வம்.... பொண்ணைப் பிடிச்சிருக்கா?'' என்று தந்தை தம் மகனைப் பார்த்தார்.

செல்வம் புன்னகையோடு ஒரு முறை மல்லிகாவைப் பார்த்துவிட்டுத் தன் தலையை ஆட்டினான்.

**ப**க்கத்து வீட்டில்—

நாதஸ்வரமும், கொட்டு மேளமும் போட்டி போட்டுக் கொண்டு மங்களகரமான இசை மழையைப் பொழிந்து கொண்டிருந்தன.

செல்வம் — மல்லிகாவின் திருமணம் கோலாகலமாக நடந்து கொண்டிருந்தது. பூரணி ஜன்னலருகே நின்று வெளியே பார்த்துக் கொண்டிருந்தாள். கண்களில் நீர் மளமளவெனச் சுரந்து கன்னங்களில் வழிந்தது.

நெஞ்சு வெடித்து விடும்போலிருந்தது பூரணிக்கு. வேதனை தாங்காமல் விம்மி விம்மி அழுதாள் அவள்.

**ம**ல்லிகா திருமணமாகிக் கணவன் வீடு சென்று விட்டாள்.

ஒரு மாதத்துக்குப் பிறகு சேலத்திலிருந்து பூரணியைப் பெண் கேட்டு வந்தார்கள். மாப்பிள்ளை ஓர் அரசினர் உயர்நிலைப் பள்ளியில் ஆசிரியராக இருந்தார். நடுத்தரக் குடும்பம். இந்த இடமாவது நல்லபடியாக அமையட்டும் என்று மங்களமும் ராமநாதனும் முழு மனதாகச் சம்மதித்தார்கள்.

ஆனால் பூரணி தனக்குக் கல்யாணமே வேண்டாம் என்று மறுத்தாள். ஆனால் போகப் போகத் தாயின் கண்ணீரும் அப்பாவின் வேதனை படிந்த முகமும் அவள் நெஞ்சை நெகிழ வைத்தன. திருமணத்துக்

குச் சம்மதித்தாள். பூரணிக்கு நல்ல படியாகத்திருமணம் முடிந்தது. கணவனோடு சேலத்துக்குப் போனாள்.

தன் கணவனின் அமைதியான போக்கும் அவர் அவள் மேல் செலுத்தும் அன்பும், அவள் செய்யும் சிறு குறையைக் கூட சிரித்துக்கொண்டே லாகவமாக அவளையே மறக்க வைக்கும்படி நடந்து கொள்ளும் கனிவான தன்மையும் அவளுக்கு மிகவும் வியப்பாக இருந்தன. மாமாவும் அத்தையும் அவள் மேல் காட்டும் அன்பும் பரிவும் அவளுக்கு மிகவும் இதமாய் இருந்தன.

இப்படிப்பட்ட ஒரு நல்ல வாழ்க்கையைக் கொடுக்கத்தான் ஆண்டவன்.... அந்த முருகன் என்னைச் செல்வத்தோடு இணையாமல் செய்தானோ? என்று கூடப் பூரணி நினைத்தாள்.

பூரணி ஏழாவது மாசமாக உண்டாகி இருந்தாள். மங்களமும் ராமநாதனும் பூரணியைப் பிள்ளைப் பேறுக்காக ஊருக்கு அழைத்து வந்தார்கள்

ஆட்டோவிலிருந்து கீழே இறங்கினாள் பூரணி.

''பூரணி மெதுவாம்மா...'' மங்களம் பூரணியின் கையைப் பிடித்துக் கொண்டாள். வீட்டுக்குள் நுழையப் போகும்போது பக்கத்து வீட்டு ஜன்னலைப் பார்த்தாள் பூரணி. ஜன்னலில் மல்லிகாவின் முகம் தெரிந்தது. பூரணி மல்லிகாவைப் பார்த்துச் சிரித்தாள். பதிலுக்கு மல்லிகா சிரிக்கவில்லை. அவள் ஏக்கத்தோடு பூரணியைப் பார்த்தாள். கண்களில் நீர் தேங்கி யிருந்தது.

''பூரணி... உள்ளே வா....'' அம்மா கூப்பிட்டாள்.

''ஏம்மா.... மல்லிகா எப்பம்மா ஊரிலிருந்து வந்தா? அவளுக்கு இது எத்தனாவது மாசம்?''

மங்களம் மகளை முறைத்துப் பார்த்தாள்.

''அதைப் பத்தி உனக்கு என்ன?''

''பாவம் மல்லிகா. அவள் அம்மா செய்த தப்புக்கு அவள் என்ன செய்வாள்?''

''அநியாயமா உன் மேல் பழியைச் சுமத்தி உனக்கு வர இருந்த நல்ல வாழ்க்கையைப் பறிச்சுட்டாங்களே? அதுக்காக ஆண்டவன் அந்தப் பெண்ணோட வாழ்க்கையைப் பறிச்சுட்டான்.''

பூரணி அவசரத்தோடு கேட்டாள்.

''நீ என்னம்மா சொல்றே?''

''மல்லிகா தாலியை அறுத்திட்டா.''

''அம்மா!''

''போன மாசம் ஒரு கார் விபத்துலே மல்லிகாவோட கணவன் இறந்து போயிட்டான். இப்ப அந்தப் பொண்ணு இங்கேதான் வாழாவெட்டியா இருக்கா....'' இதைச் சொல்லிவிட்டு மங்களம் உள்ளே போய் விட்டாள்.

அம்மா உண்மையைத்தான் சொல்கிறாளா? மல்லிகாவின் கணவர் செல்வம் இறந்து போய் விட்டாரா? மல்லிகா இந்தச் சின்ன வயதில் விதவையாகி விட்டாளா? பூரணியால் நம்ப முடியவில்லை. அவள் நெஞ்சை ஏதோ அடைப்பதைப் போலிருந்தது. கண்களில் தேங்கி நின்ற நீர் சொட்டுச் சொட்டாகக் கன்னங்களில் வழிந்தது.

---

# ✿ பிரசுரத்துக்குரிய கதைகள்

**அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி 1979க்கு வந்த கதைகளில் பரிசு பெற்றவை போக, பிரசுரத்துக்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட கதைகள் கீழே தரப்பட்டுள்ளன.**

1. பார்வை விரிந்து இருக்கவேண்டும் — பிரதிபா ராஜகோபாலன்
2. கிரியா ஊக்கி — இளம்பாரதி
3. கண்ணீர் இயற்றிய காவியம் — வி. வி. ஜே. ஜோசப்
4. மினிஸ்டர் வரார் — ஜயேந்திரன்
5. குற்றமுள்ள நெஞ்சு — ஏ. என். பட்டுலிங்கம் (அறிமுக எழுத்தாளர்)
6. இருப்புமுனை — ஜோதிர்லதா கிரிஜா
7. வித்தியாசமானவர்கள் — சத்தியப்பிரியன்
8. ஒரு தவம், ஒருபழி இரண்டு சாட்சிகள் — வ. சா. நாகராஜன்
9. குறிஞ்சிப்பூக்கள் எங்கும் பூக்கும் — ராஜேஷ்குமார்
10. பூர்ணிமா — ஹேமா ஆனந்ததீர்த்தன்
11. சட்டங்கள் நிலைப்பதில்லை — ஹபீப் ராஜா (அறிமுக எழுத்தாளர்)
12. ஜெல்லோகோ ஏமந்து — வினோதானந்த்
13. வெள்ளிக்கோப்பை — ஜெனமே ஜெயன்
14. காதல் — செல்லமணி (அறிமுக எழுத்தாளர்)
15. பெண்மை சிலிர்த்த பொழுது — கா. மங்கையர்க்கரசி (அறிமுக எழுத்தாளர்)
16. குழியில் விழுந்த காய்கள் — லீலா கோபாலன்
17. ஆற்றாது அழுத கண்ணீர் — குன்றக்குடி பெரிய பெருமாள்
18. வாழ்க்கையின் அர்த்தங்கள் — அய்க்கண்

# நான் கண்ட ரஷ்யா

## அகிலன்



✕ பர்ச் மரக்காடு

### 2. அடிப்படைத் தேவைகள் — வசதிகள்

**மா**ஸ்கோ விமான நிலையத்திலிருந்து எங்கள் கார் நகருக்குள் சென்றது. சாலை மிகவும் விசாலமான சாலை. கார்கள் வருவதற்கு ஒருபுறமும் செல்வதற்கு ஒரு புறமும் ஒதுக்கி யிருந்தார்கள். சாலையின் நடுவில் வளர்க்கப்பட்டிருந்த புல்தரைக்கு ஒரு லாரி நீர் பாய்ச்சிக் கொண்டு வந்தது. முப்பது கிலோ மிட்டர் தொலைவுக்கு மேல் கடந்து நகரத்தின் எல்லையை நாங்கள் எட்ட வேண்டும்.

சாலைக்கு இரு புறங்களிலும் அடர்ந்து வளர்ந்திருந்த பர்ச் மரக் காடுகள் பச்சைப் பசேல் என்று கதிரொளியில் குளித்துக்கொண்டிருந்தன. முன்பு இலையுதிர் காலத்தில் இங்கு வந்தபோது, இதே காடுகளின் ஒரு பகுதி செக்கச் செவேல் என்றும், மறுபகுதி கொழுந்து விட்டெரியும் தீப்பிழம்புகள் போல் பொன் வண்ண நிறத்திலும் காட்சியளித்தது என் நினைவுக்கு வந்தது. அங்கெல்லாம் பருவத்துக்கேற்றபடி இலைகள் பச்சையாகவும் சிவப்பாகவும் மஞ்சளாகவும் நிறம் மாறுவதும், பிறகு மரங்கள் இலைகளை அறவே உதிர்த்துவிட்டு உறை பனியைத் தாங்கி நிற்பதும் கண்கொள்ளாக் காட்சியாகும்.

நகரங்களைச் சுற்றிக் காடுகள் வளர்ப்பதும், நகருக்குள்ளே கூட அங்கங்கே திட்டுத் திட்டான பகுதிகளில் மரங்களை நட்டு வளர்ப்பதும், நகரத்தின் சாலையோரங்களில் இருபுறங்களிலும் நிழல் தரும் மரங்களை வைத்துப் பேணுவதும் அவர்களுடைய வழக்கம். மக்களின் குடியிருப்புப் பகுதிகளைச் சுற்றிலும் நாம் அடர்த்தியான சோலைகளையும் பூங்காக்களையும் தவறாது காணலாம். அழகுக்காக மாத்திரமல்ல, மக்களின் ஆரோக்கியத்தைக் காப்பதற்காகவும் அவர்கள் சுவாசிக்கும் காற்றைத் தூய்மையாக வைத்திருப்பதற்காகவும் இவ்வாறு நகருக்குள் ஏராளமான மரங்களை நட்டு வளர்க்கிறார்கள். அவற்றைப் பேணுவதற்குத் தாராளமாகச் செலவு செய்கின்றனர். மாஸ்கோ நகரத்தின் மையப் பகுதியான சில சுறுசுறுப்பான தெருக்களில் மட்டுமே நம்மால் மரங்களைக் காண முடியவில்லை.

'ஹோட்டல் லெனின்கிராட்' என்ற பெயருள்ள ஹோட்டலுக்கு நாங்கள் அழைத்துச் செல்லப்பட்டோம். எங்கள் குழுவில் வந்த ஹிந்தி எழுத்தாளரான சந்திரகுப்த வித்யாலங்காருக்கு இந்த ஹோட்டல் அவ்வளவாகப் பிடிக்கவில்லை. '' 'ஹோட்டல் ரஷ்யா'வில் ஏற்பாடு செய்திருக்கலாமே?'' என்றார் அவர். மாஸ்கோவுக்கு அவர் இரண்டாவது முறை வருபவர். நான்கூட முன்பு இருமுறை வந்தபோதும் ஹோட்டல் ரஷ்யாவில்தான் தங்கியிருந்தேன். நவீன வசதிகள் மிகுந்த — அண்மையில் கட்டப்பட்ட — பிரம்மாண்டமான ஹோட்டல் அது. முதல்தரமான ஐந்து நட்சத்திர ஹோட்டல்.

கோடைக்காலமாதலால் லட்சக் கணக்கில் வெளிநாட்டு உல்லாசப் பயணிகள் மாஸ்கோவில் வந்து குழுமியிருந்தார்கள். அதோடு சோவியத் நாட்டின் பிற பகுதிகளிலிருந்தும் வந்திருந்தார்கள். ஹோட்டல் ருஷ்யாவில் இடம் கிடைக்கவில்லை — நண்பர் மாலிகோவ் என்னிடம் நிலைமையை விளக்கினார்.

மாஸ்கோ ஹோட்டல்களுக்குள்ள இட நெருக்கடி எனக்கு நன்றாகத் தெரியும். அமெரிக்கா, கானடா, மேற்கு ஐரோப்பா, கிழக்கு ஐரோப்பா முதலிய பகுதிகளிலிருந்தெல்லாம் பயணிகள் அங்கு வந்த வண்ணமாகவே இருப்பார்கள். அதோடு ஆசிய ஆப்பிரிக்க நாடுகளிலிருந்து எங்களைப் போன்ற விருந்



தினர்களும் எண்ணற்றோர் அங்கு வருவதுண்டு. பல ஹோட்டல்கள் நகரத்தில் இருந்தும் அவர்களால் சமாளிக்க முடியவில்லை. — நிலைமையை நானும் வித்யாலங்காருக்கு எடுத்துச் சொல்லி அவரை இணங்கச் செய்தேன்.

ஹோட்டல் லெனின்கிராடும் சாதாரணமானதல்ல. இருபத்திரண்டு மாடிகளையும் நவீன வசதிகளையும் கொண்டது. மூன்று நட்சத்திர ஹோட்டலுக்கு ஒப்பானது. இரண்டு பேர்களுக்கு ஒரு பெரிய அறை வீதம் ஒதுக்கியிருந்தார்கள். அன்பர் மாலிகோவிடம் சொல்லி, இயன்றால் எங்கள் நால்வருக்கும் தனித் தனியே அறைகள் ஏற்பாடு செய்யச் சொன்னேன். வெளியூர்களிலும் இதே போல் இருப்பது நல்லது என்றேன். உடனடியாக என் விருப்பம் நிறைவேற்றப்பட்டது. வெளியூர்களிலும் தனி அறைகளுக்கு ஒழுங்கு செய்வதாக ஒப்புக் கொண்டார்.

நான்கு பேர்களைக் கொண்ட இந்திய எழுத்தாளர் குழுவின் தலைவன் என்ற முறையில் மற்றவர்களுக்கான வசதியையும் நான் கவனிக்க வேண்டியிருந்தது. எழுத்தாளர்களுக்குத் தனிமை கிடைத்தால் குறிப்புக்கள் எழுதுவதற்குக் குறுக்கீடு இருக்காது. நானும் கூட குறிப்பு எழுத விரும்பினேன்.

ஹோட்டலைப் பற்றி இங்கு நான் குறிப்பிடுவதற்குக் காரணம் இருக்கிறது. ''அங்கு பெரிய ஹோட்டல்கள் இருக்கின்றனவா? அவற்றில் ரஷ்யர்கள் தங்குகிறார்களா?'' எனப் பல நண்பர்கள் கேட்டிருக்கிறார்கள். ஹோட்டல்களில் வெளி நாட்டுப் பயணிகளுக்கு முன்னுரிமை வழங்குகிறார்கள். ஆனாலும் வெளிக் குடியரசுகளிலிருந்தும் வெளியூர்களிலிருந்தும் வரும் உள் நாட்டு ரஷ்யர்களுக்கும் அங்கு இடம் கிடைக்கும். இந்த விஷயத்தில் நம் நாட்டைப் போலத் தான் அங்கும் இருக்கிறது. ஹோட்டல்களை நிர்வாகம் செய்கிறவர்களும் அங்கு பணி புரிகிறவர்களும் முற்றிலும் பெண்களாக இருப்பதுதான் ஒரு மாறுதல்.

நான் அங்கு வரும் செய்தியைத் தெரிந்து கொண்டு, என்னைச் சந்திப்பதற்காக முன்னதாகவே ஹோட்டலுக்கு வந்திருந்தார் என் ரஷ்ய நண்பர் வித்தாலி ஃபூர்னிகா. இவர் காலஞ்சென்ற ரஷ்யத் தமிழறிஞர் செமியோன் ருதினிடம் லெனின்கிராட் பல்கலைக் கழகத்தில் தமிழ் கற்றவர். பிறகு சென்னை பல்கலைக் கழகத்தின் தமிழ்த் துறையில் சேர்ந்து டாக்டர் மு. வ.விடம் மேல் கல்வி பயின்றவர். சென்னைக்கு அவர் மாணவராக வந்தபோதே அவரை

லெனின்கிராடில்: ✕ ருஷ்ய மியூஸியத்துக்கு முன் புஷ்கின் சிலை



மாஸ்கோவில்:

✕ புரட்சி வீரரும் எழுத்தாளருமான பிருத்விசிங் ஆஜாத்துடனும் ஹிந்தி பத்திரிகை ஆசிரியர் வித்யாலங்காருடனும் அகிலன்

✕ முன்னேற்றப் பதிப்பகத்தின் தமிழ்த்துறை ஆசிரியர் வித்தாலிப் பூர்னிகா

எனக்குத் தெரியும். மாஸ்கோவில் முன்னேற்றப் பதிப்பகத்தின் தமிழ்த் துறைக்கு இவர் இப்போது ஆசிரியராக இருக்கிறார். இவரோடுதான் மொழிபெயர்ப்புத் துறையில் நண்பர்கள் பூர்ணம் சோமசுந்தரம், கே. ராமநாதன் ஆகியோர் உழைக்கின்றனர்.

''ஒரு வாரத்துக்கு முன்பே கோடை விடுமுறையில் நான் என் மனைவியோடும் மகனோடும் கருங்கடல் பகுதிக்குப் போய் ஓய்வெடுக்க நினைத்தேன். நீங்கள் வருவதாகச் செய்தி வந்தவுடன், அவர்களை மட்டும் தனியே அனுப்பிவிட்டு ஒரு வாரமாய் இங்கு தங்கியிருக்கிறேன். இன்று உங்களோடு பொழுது போக்கிவிட்டு, மாலை விமானத்தில் கிளம்ப வேண்டும். டிக்கட் வாங்கிவிட்டேன்'' என்றார் ஃபூர்னிகா.

அவருடைய அன்பும் நட்பும் என்னை வியப்புறச் செய்தது. ஆண்டுக்கு ஒரு முறை கிடைக்கும் அரிய விடுமுறை வாய்ப்பைப் பயன்படுத்தாமல் என்னைச் சந்திப்பதற்காக ஒரு வாரம் அவர் மாஸ்கோவில் தங்கியிருக்கிறார்!

ருஷ்ய மொழியில் வெளியான 'தற்கால இந்தியச் சிறுகதைகள்' என்ற நூலில் ஒரு பிரதியை அவர் என்னிடம் கொடுத்தார். அதில் தமிழ் மொழிக் கதைகளாக என் கதையும் ஜெயகாந்தனின் கதையும் வந்திருந்தன. 1976ல் வெளியான பதிப்பு அது. கெட்டியான தாளில் உறுதியான காலிகோ அட்டையுடன் 370 பக்கங்கள் கொண்ட நூல் அது. ஒரு லட்சம் பிரதிகள் போட்டிருக்கிறார்கள். வெளிவந்தவுடனேயே அவ்வளவும் விற்பனையாகி விட்டன! விலை ஒன்றரை ரூபிளுக்கும் சற்றுக் குறைவு.

நண்பர் ஃபூர்னிகாவிடம் பேசிக் கொண்டே, மாஸ்கோவில் வாழும் தமிழ் நண்பர்கள் சிலருக்கு போன் செய்தேன். முன்பு இருமுறை அங்கு சென்றபோதும் திரு கிருஷ்ணையா மாஸ்கோவில் இருந்தார். என்னுடைய ஓய்வு நேரத்தில் பெரும் பகுதியை நான் அவரோடு மாஸ்கோ நகரத்தின் தெருக்களில் கழிப்பது வழக்கம். சென்ற ஆண்டு அவர் சென்னை திரும்பி விட்டார். ஆகவே நண்பர்கள் திரு மணிவர்மா, திரு பூர்ணம் சோமசுந்தரம், திரு கே. ராமநாதன் ஆகியோரிடம் தொடர்பு கொண்டு, என் வருகை பற்றியும் நான் ஜூன் 23ந் தேதி வரை அங்கு தங்குவது பற்றியும் குறிப்பிட்டேன். கே. ராமநாதன் உடனே புறப்பட்டு வந்து என்னைச் சந்திப்பதாகத் தெரிவித்தார். மற்ற நண்பர்கள் என் வசதியைத் தெரிந்து கொண்டு போன் செய்துவிட்டு வருவதாகக் கூறினார்கள்.

சோவியத் நாட்டில் 'டெலிபோன் டைரக்டரி' அச்சிடும் பழக்கமில்லை. அவரவர்களுக்கு வேண்டிய எண்களை நோட்டில் குறித்து வைத்துக் கொள்வார்கள். பலரும் தங்கள் முகவரி — டெலிபோன் விவரங்கள் அச்சிட்ட விசிட்டிங் கார்டுகளைப் பரிமாறிக் கொள்வார்கள். சம்பந்தம் இல்லாதவர்களிடமோ, நேரிடைத் தொடர்பில்லாதவர்களிடமோ தொலை பேசியில் தொடர்பு கொள்ளும் தொல்லை இதனால் குறைக்கப் படுகிறது.

நண்பர் ராமநாதன் வந்து சேர்ந்தார். முன்னேற்றப் பதிப்பகத்துக்காகத் தமிழ் மொழிபெயர்ப்பு வேலைகளைக் கவனிப்பவர் அவர். வீட்டிலிருந்தபடியே வேலையைக் கவனிக்கலாம். அவரிடமும் நண்பர் ஃபூர்னிகாவிடமும் கேட்டு எனக்கு அங்குள்ள ஸ்லைவாசி விவரங்களைத் தெரிந்து கொள்ள வேண்டியிருந்தது. வருமானம், வீட்டு வாடகை, மளிகை, போக்கு வரத்து, டெலிபோன் கட்டணம், குழந்தைகளின் கல்வி, மருத்துவம் முதலியவற்றுக்கான பொருளாதாரச் செய்திகளைத் தெரிந்து கொள்ள விரும்பினேன். ஏனென்றால் ஒவ்வொரு குடிமகனையும், குடும்பத்தையும் பாதிக்கும் விஷயங்கள் இவை. நம் நாட்டுக்கு அந்த நாடு எந்த வகையில் இருக்கிறது என்பதை அறிந்துகொள்ளும் ஆவல் எனக்கு.

ரஷ்ய நாட்டு ரூபிளுக்கு அன்னியச் செலாவணிக் கணக்குப்படி பார்த்தால், இந்திய ரூபாய்க்குப் பத்து ரூபாய்க்குச் சமமானது. ஆனால் அவர்களுடைய மதிப்புப் படி பார்த்தால் நம்முடைய மூன்று ரூபாய்க்குச் சமமாகக் கொள்ளலாம். மாஸ்கோவில் வாழும் இந்திய நண்பர்கள் அதை ஒரு ரூபாய்க்குச் சமமாகவே மதிக்கிறார்கள்.

குறைந்தபட்ச மாதச் சம்பளம் ஒருவருக்கு 80 ரூபிள் என்றால் அதிகபட்சம் 500 அல்லது 600 ரூபிள் என வைத்துக் கொள்ளலாம். ரஷ்ய மக்களின் சராசரி மாத வருமானம் 155 ரூபிள் எனக் கணக்கிட்டிருக்கிறார்கள். குறைந்த பட்சச் சம்பளத்துக்கும் அதிகபட்ச சம்பளத்துக்கும் இடையே உள்ள வேற்றுமை ஏழெட்டு மடங்குகூட இல்லை. பெரும்பாலானவர்கள் கிட்டத்தட்ட ஒரே அளவு சம்பள விகிதத்தில் உழைக்கிறார்கள். ஆணும் பெண்ணும் வேலை செய்வதால் போதிய வருமானம் கிடைக்கிறது. வயது முதிர்ந்தவர்களுக்கு ஓய்வுக் கால ஊதியம் வருகிறது. இடையே போனஸ்"ம் தரப்படுகிறது.

வீட்டு வாடகை 5 ரூபிளிலிருந்து 10 ரூபிள் வரை வசூலிக்கிறார்கள். ராமநாதனின் வீடு, மணிவர்மா வீடு, இரண்டு மூன்று ரஷ்ய நண்பர்களின் வீடு ஆகியவற்றைப் பிறகு நேரில் சென்று பார்த்தேன். (தொடரும்)

திருமதி கௌசல்யா தேவியின் கணவர் ஆண் மனைவியிடமிருந்து விவாகரத்து கோரி வழக்கு தொடுத்துள்ளார். தன்னைத் தன் மனைவி கவனிப்பதே இல்லை என்றும், அரசியலில் ஈடுபட்டுத் தன்னைப் பெரிதும் அவமதிக்கிறார் என்பதும் கணவரின் குற்றச்சாட்டு.

தன்மீது தொடுக்கப்பட்டுள்ள இந்த வழக்கு முடியும் வரை கௌசல்யா தேவி பதவியிலிருந்து விலகியிருக்க வேண்டும்.

பதவி?

ஆம்: அவர் பிகாரின் ஒரே பெண் மந்திரி

—இந்தியன் எக்ஸ்பிரஸ்

—ராமுசாமி



அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி
ரூ 500/= இரண்டாம் பரிசு பெற்ற கதை

# மீண்டும் வரும்

## சுந்தரராஜன்

**கா**விரி மௌனமாக ஓடிக் கொண்டிருந்தாள். நாங்கள் பேசியதை யெல்லாம் கேட்டுக்கொண்டிருப்பாள்.

''அப்புறம் என்ன தாத்தா ஆச்சு?'' என் முன் என் முன்னால் அமர்ந்திருந்த அந்தச் சிறுவன், மோகன்.

''என்ன ஆகும்? அவன் உயரத்தில் தூக்கின கத்தி அப்படியே மாலையாக மாறி ராணி கழுத்துலே விழுந்துடுத்து. கீழே கிடந்த பையனுக்கும் உயிர் வந்துடுத்து.''

''என்னது நிஜமாகவா தாத்தா?'' மோகனின் குரலில் உற்சாகம் பொங்கி வழிந்தது.

''என்ன போலாமா?'' — நான் எழுந்து கொண்டேன்.

''தாத்தா, எனக்கு நீ நாளைக்கு என்ன கதை சொல்லப் போறே?''

நாளை என்ன கதை சொல்லலாம்?

''இன்னிக்கு அரிச்சந்திரன் கதை சொன்னேன் இல்லையா? அந்தக் கதையைக் கேட்டுட்டு, அந்த ராஜா மாதிரியே வாழ முயற்சி செய்த ஒரு தாத்தாவின் கதையை நாளைக்குச் சொல்கிறேன்.''

''உன்னை மாதிரியான தாத்தாவா? அவர் பேர் என்ன தாத்தா?''

''உன் பேரேதான் அவருக்கும் -- மோகன். வா, ஏற்கனவே ரொம்ப நாழியாயிடுத்து. வீட்டுலே உங்க தாத்தா கவலைப்படுவார்!''

மோகன் பண்ணையாரின் பேரன். முதல் பையன் குப்புராஜனின் வாரிசு. பண்ணையாரின் மனைவி ரொம்ப நாட்களுக்கு முன்னாலேயே மறைந்து விட்ட உத்தமி. பண்ணையார், தாம் படிக்கா விட்டாலும் தம் பையன்கள் இருவரையும் படிக்க வைத்தார். குப்புராஜன் படிப்பை முடித்துவிட்டு, பக்கத்துப் பட்டணத்தில் வியாபாரம் என்று தங்கிவிட்டான். தன் பையன் மோகனைத் தன் தந்தையிடமே விட்டிருந்தான். பண்ணையாரின் இரண்டாம் பையன் கணபதி, கல்லூரிப் படிப்பை முடித்து விட்டு, மேலே என்ன செய்யலாம் என்று யோசித்துக் கொண்டிருக்கிறான். கிராமத்தில் உள்ள எல்லோருக்கும் என்மேல் ஒரு மதிப்பு, மரியாதை.

தனியாக இருந்த எனக்கு மோகனைப் பார்த்த உடனேயே ஏதோ ஒரு பந்தம் ஏற்பட்டு விட்டதாகத் தோன்றியது. அவன் துடிப்பு என்னைக் கவர்ந்து கொண்டே இருக்கும். துறுதுறு என்ற முகமும், ஆறுவயதுக்குள் அவன் பேச்சில் வெளிப்படும் விவேகமும்...

ஆனால், ஓ இறைவா, நீ மிகக் கொடியவன்! இந்தப் பாலகனின் விழிகளை ஏன் ஊனமாக்கிவிட்டாய்?

''ஏன் தாத்தா, அந்த ராஜா மாதிரியே எல்லாரும் உண்மையே பேச முடியுமா? முடியும்னு அப்படி யாராவது இருக்காங்களா?'' என்னுடன் நடந்து கொண்டே கேட்டான் மோகன்.

நான் அவன் கையைப் பிடித்துக் கொண்டேன்.

''ஏன் தாத்தா, நீ பொய் சொல்லியா?''

நான் தடுமாறினேன். என்ன பதில் சொல்வது? நல்ல வேளை, அவன் என் பதிலை எதிர்பார்க்காமல் என்னவோ யோசனையில் ஆழ்ந்து விட்டான்.

**ப**ஞ்சாயத்துத் தொடங்கியது.

''ஏம்மா பொன்னு, என்னவோ திடீர்னு பஞ்சாயத்துக் கூட்டணும்னு உங்க அப்பன் கிட்டச் சொல்லி அனுப்பினியே, என்ன விஷயம்?'' என்றார் பூவராகன், பஞ்சாயத்துத் தலைவர், கிராமத்திலேயே வயதில் மூத்தவர்.

பொன்னு சபை நடுவில் வந்து நின்றாள். சுற்றிலும் இருந்த மக்களைப் பார்த்தாள். நான் இருக்கும் இடம் வந்ததும் பார்வையை என்மேல் நிறுத்தினாள். உதடுகள் துடித்தன. கண்கள் கலங்கி இருந்தன. என்னிடம் எதையோ ஞாபகப்படுத்த முயல்பவள்போல் என்னை ஏக்கத்துடன் பார்த்தாள்.

என்னுடைய இருக்கை திடீர் என்று நெருப்பாக மாறி என்னை அப்படியே தன்னுள் அடக்கிக் கொள்வதைப் போல் இருந்தது. அப்படி ஏதாவது நிஜமாகவே நடந்தால்கூட நல்லதுதான்.

அவள் தன் பார்வையைப் பஞ்சாயத்தில் என் அருகில் அமர்ந்திருந்த பண்ணையார் பக்கம் திருப்பினாள். அவர் அலட்சியமாக மீசையைத் தடவி விட்டுக்கொண்டார்.

"சொல்லும்மா பொன்னு! என்ன விஷயம்?" என்றார் பண்ணையார். இவரால் எப்படிக் கொஞ்சம் கூட எதுவுமே நடக்காத மாதிரி, குரலில் எதுவும் பிசிரோ, நடுக்கமோ இன்றிப் பேச முடிகிறது?

"பஞ்சாயத்துப் பெரியவங்களே! உங்களுக்கெல்லாம் என் வணக்கம்." பொன்னு பேச ஆரம்பித்தாள். நான் மனத்துக்குள் நடுங்கிக் கொண்டிருந்தேன். ஆண்டவா, என்னை என்ன செய்யப் போகின்றாய்? பொன்னு பேசுவதைக் கவனித்தேன். நான் மட்டுமா, எல்லோரும் பரபரப்போடு கவனித்தார்கள்.

"ஐயா, நான் கீழ் ஜாதியைச் சேர்ந்தவள் தான். ஆனாலும் இந்தச் சபையில் எனக்கும் நாயம் கிடைக்கும்னு நம்பிக்கையிலே வந்திருக்கேன். உங்க நேரத்தை வீணடிக்கிறதுக்கு மன்னிச்சுடுங்க."

பொன்னுவின் குரலில் பணிவு இருந்தது. நியாயத்தை எதிர்பார்க்கும் எண்ணம் இருந்தது; பயம் இருந்தது.

"பொன்னு, நீ கவலைப்படத் தேவையே இல்லை. இந்தச் சபை உன்னோட விவகாரம் நியாயமானதுன்னு அபிப்பிராயப் பட்டால், கண்டிப்பாக நேர்மையான முறையில் தீர்த்து வைக்கும். நீ உன் வழக்கைச் சொல்லலாம் என்ன, பண்ணையாரே?" என்றார் பூவராகன்.

கம்பீரமாக. பண்ணையார் தலையாட்டினார்

"ஆமாம், பொன்னு? இந்தப்பஞ்சாயத்துக்கு முன்னாடி எல்லாரும் சமம்! அந்த இறைவன் தப்புப் பண்ணதாகக் கூட நீ தகுந்த சாட்சியோட நிரூபித்தால், ஆண்டவனுக்கே தண்டனை கொடுக்கும் இது!" என்றார் அவர்.

'தகுந்த சாட்சி' என்பதை அவர் அழுத்திச் சொன்னது போல எனக்குப் பட்டது. என் உள்ளத்தில் இனம் புரியாத வலி ஒன்று பரவியது.

பொன்னு திடீர் என்று தன் புடவைத் தலைப்பைச் சற்று விலக்கினாள். மக்கள் எல்லோரும் வியப்பில் கூவினர் - அவள் தன் கையில் உயர்த்திக் காண்பித்த மஞ்சள் கயிற்றைக் கண்டதும்.

"என்னது பொன்னு, உனக்குக் கல்யாணம் ஆயிடுத்தா?" என்றார் பூவராகன் பிரமிப்புடன்.

"அதாங்க வழக்கு!" என்றாள் பொன்னு. கண்களில் கண்ணீர் பெருக ஆரம்பித்திருந்தது. பண்ணையாரின் முகம் கடினமான பாறை போன்று இருந்தது.

"இந்தத் தாலியைக் கட்டியவரை என் கிட்ட இருந்து பிரிக்க ஏற்பாடு நடக்குதுங்க, ஐயா!" என்றாள் பொன்னு, தன் புடவைத் தலைப்பை முன்மாதிரி ஆக்கிக் கொண்டு.

"பொன்னு, திருட்டுத் தாலி கட்டிக்கறது நம்ப கிராமத்திலே தப்புன்னு தெரியும் இல்லியா?" என்றார் நான்காவது உறுப்பினர் ராமகிருஷ்ணன்.



''ஐயா, தண்டனை தரத்துக்கு முன்னால் என் கணவரைத் திருப்பித் தாருங்கய்யா! அவர் என்னைப் பார்த்து விட்டால், கண்டிப்பாக மனசு மாறி விடுவார். இரண்டு பேருமாச் சேர்ந்து தண்டனையை ஏத்துக் கிறோம்.''

''என்ன உளர்றே? உன் கணவன் பஞ்சாயத்துக்கிட்டச் சிறைப்பட்டிருக்கிற மாதிரிப் பேசறியே? திருட்டுத் தாலியை உன் கழுத்திலே கட்டியவன் யாரு?'' என்றான் மருது.

''யாரும்மா உன் கணவன்?'' என்றேன். என் குரலின் நடுக்கம் என்னைக் காண்பித்துக் கொடுத்து விடுமோ என்று பயந்தேன். அவள் சவுக்கடி பட்டவள் போல் என்னை நிமிர்ந்து பார்த்தாள். 'ஐயா! நீங்களா அப்படிக் கேட்டீங்க?' என்பது போல் அவள் இதழ்கள் துடித்தன. உடனேயே தன்னைச் சமாளித்துக் கொண்டாள்.

''நம்ப பண்ணையாரோட இரண்டாவது மகருங்க!'' — பொன்னு தன் தலையைக் குனிந்து கொண்டாள். பயமா, நாணமா? உடனே வேகமாக மௌனம் கூட்டத்தினிடையே பரவியது. பஞ்சாயத்தார்கள் நிமிர்ந்து உட்கார்ந்தனர்.

''பொன்னு, நீ என்ன பேசறே?'' என்றார் பூவராகன். அவர் குரல் தொய்ந்து போயிருந்தது.

கூட்டத்தில் திடீரென்று பரபரப்பு ஏற்பட்டது. மாரி ஓடிவந்து கொண்டிருந்தான்.

''ஐயா, கோவில் காளை கட்டவிழ்த்துக் கொண்டு வயலில் புகுந்து விட்டது!'' என்றான். அவன் குரலில் பதற்றம் இருந்தது. பூவராகன் எழுந்து கொண்டார்.

''இவ வழக்கை எடுத்த வேளை, நம்ப தெய்வத்துக்கே பொறுக்கலியோ என்னவோ? போய் மாட்டை விரட்டுவோம். பொன்னு, நாளைக்கு மறுபடியும் சபையைக் கூட்டுவோம். நீ அதுவரைக்கும் பஞ்சாயத்துக்காரங்க யாரையும் பார்த்துப் பேசக் கூடாது!''

**மோ**கனுக்கு இன்று உடம்பு சரியில்லை. இரண்டு மூன்று நாட்களாகவே படுத்துக் கொண்டிருக்கிறான். படுக்கையில் கிடக்கும் அவனைப் பார்க்கவே என்னவோ செய்தது மனத்தை. அவனுக்குக் கதை சொல்லாமல் பொழுதை ஓட்டுவதுதான் கஷ்டமாக இருந்தது. மோகன்.... ஆண்டவா, அவனை ஏன் குருடனாகப் படைத்தாய்? வேறு ஏதாவது பாகத்தை ஊனமாக்கி யிருக்கக் கூடாதா?

ஆற்றங்கரை தனிமையைத் தாங்க முடியாமல் எழுந்து மணலை உதறிவிட்டு எழுந்தேன். வீதியில் நுழைகையில் மரத்தடியில் யாரோ நிற்பது தெரிந்தது. கண்களை இடுக்கிக்கொண்டு பார்த்தேன்.

பொன்னு!

இமயம் அப்படியே வந்து என் இதயத்தை அழுத்துவது போலப் பிரமை! அவள் கைகளை எடுத்துக் கூப்பினாள். பின் கண்களைத் துடைத்துக் கொண்டு நடந்தாள்.

இறைவா, எனக்கு ஏன் இப்படி ஒரு தண்டனை? என்னை இக்கட்டில் மாட்டிவிட்டு நீ ரசிக்கின்றாயா? இரண்டு மூன்று நாளைக்கு முந்தைய நிகழ்ச்சியை ஒரேயடியாக நான் மறக்கச் செய்யக் கூடாதா? ஆனால் என்னால் மறக்க முடியும்! நான்தானே சாட்சியாக இருந்தேன்!

அன்றும், பொன்னு இப்படித்தான் என் எதிரில் கைகூப்பி வணங்கிவிட்டுக் கண்களைத் துடைத்துக் கொண்டாள். ''ஐயா, நீங்கதான் ஆண்டவன் மாதிரி என் கல்யாணத்தை நடத்தி வைச்சீங்க! நல்லாப் பூவும் பொட்டுமா வாழணும்னு வாழ்த்துங்க ஐயா!'' என்று சொன்னாள்.

அன்று இரவில் வந்து கதவைத் தட்டினார்கள் இருவரும். இந்த இரவில் யாரென்று எரிச்சலுடனும் வியப்புடனும் திறந்து பார்த்தால், கணபதியும், பொன்னுவும். கணபதி உள்ளே நுழைந்தான். நான் விளக்கின் திரியைப் பெரிதாக்கினேன். பொன்னு வெளியே நிற்கிறாள். என்றாலும், விஷயம் என்ன என்று புரிந்து கொள்ள முடிந்தது.

''கணபதி....''

''ஐயா, பொன்னுவைக் கல்யாணம் செய்துக்கறது அப்படீன்னு தீர்மானிச்சிட்டேன்.''

''ஆமாம் சாமி! அதுக்கு முன்னாடியே என் கழுத்துலே தாலி ஒண்ணைக் கட்டி அதை உறுதிப்படுத்திய்யான்னு நான்தான் சொன்னேன்'' என்றாள் பொன்னு.

நான் மலைத்துப் போய் நிற்கிறேன். கிராமத்தில் திருட்டுத் தாலி கட்டுவது ஒரு குற்றம். அதையும் பண்ணையாரின் மகனே செய்யப் போகிறான். என்னை வேறு சாட்சியாக்கப் போகிறான்.

கணபதி பையில் இருந்து ஒரு மஞ்சள் கயிற்றை எடுத்தான். அது ஏற்படுத்தித் தந்த நிழல் சுவரில் இருந்து கொண்டு என்னை நோக்கி ஆடியது.

''ஐயா, நானும் யோசித்துப் பார்த்தேன். இவன் சொல்றது சரின்னு தோணுது. ஏன் சாமி, ஒண்ணுமே பேச மாட்டேங்கறீங்க?''

''கணபதி, நான் என்ன பேசறது? உங்க உடம்புல ஓடறது இளம் ரத்தம். என்னென்னவோ நினைச்சுக்கிட்டு நம்ப சட்டதிட்டத்தை யெல்லாம் உடைக்கிறீங்க. உன்

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

அவன் : ''பம்பாயில் போனவாரம் தமிழ்ப்படம் ஒண்ணு பார்த்தேன்!''

இவன் : ''என்ன படம்டா...?''

அவன் : ''ஆடு BOMBAY!''

—உ. ராஜாஜி



அப்பாவின் நண்பன்கற முறையில் உனக்குப் புத்திமதி சொல்லவேண்டியது என் கடமை.''

அவன் தீர்மானமாகச் சொன்னான்:

''உங்களை ஆண்டவன் மாதிரி நினைச்சுக் கிட்டுத்தான் வந்தோம். நீங்க என்ன சொன்னாலும் சரி. நான் கேட்கப் போறது இல்லை யாது. அவ கழுத்திலே தாலியைக் கட்டத் தான் போறேன்; அதுவும் உங்க முன்னு லேயே!''

அவன் சொன்னபடியே தாலியைக் கட்டி னான்.

''ஐயா, எங்கப்பாவுக்குத் தெரியாமல் இங்கே வந்திருக்கேன். நான் காலம்பற ஊருக்குப் போறதாப் பேர் பண்ணி இருக் கேன். நான் இப்ப நிஜமாகவே போறேன். இன்னும் இரண்டு நாட்களில் வந்து இவளைக் கூட்டிப் போகப் போறேன்.''

''கணபதி!'' — அவன் திரும்பினான். ''கண பதி! ஒண்ணு தெரிஞ்சுக்கோ! உங்கப்பாவும் நானும் ரொம்ப நல்ல நண்பர்கள். சொல் லப்போனால் உங்கப்பாவுக்கு நான் பட்ட நன்றிக் கடன்கள் ஏராளம். என் பையன் இப்பப் படிச்சுட்டு, நல்லபடியா இருக்கான் என்றால் உங்கப்பாதான் காரணம். என்னால் அவருக்குத் துரோகம் செய்ய முடியாது. நான் முதல் காரியமாக் அவரிடம் போய் இந்தக் கல்யாணத்தைப் பத்திச் சொல்ல வேண்டும். அது பெரிய தப்பு!'' என்றேன்.

கணபதி யோசித்தான்.

''நீங்க சொல்றது சரிதாங்க. அப்படியே செய்யுங்க. ஆனா, இப்ப இல்லே!'' — அவன் சடாரென்று வெளியே சென்று வாசற் கதவை வெளிப்புறமாகச் சாத்தினான். நான் ஜன்னல் வழியாக, வியப்புடனும், கோபத்துடனும் அவனைப் பார்த்தேன்.

''ஐயா, இப்ப எங்கப்பா கண்ணுல நான் பட்டால் ஆபத்து. பொன்னு இன்னும் ஒரு மணி நேரம் கழித்துக் கதவைத் திறந்து விடுவாள். நீங்க போய் எங்கப்பா கிட்டத் தாராளமாகச் சொல்லுங்க. பொன்னு வுக்குத் தன்னைக் காப்பாத்திக்கத் தெரியும் னும் சொல்லுங்க.''

அவன் வார்த்தைகள் என்னைப் பிரமிப்பில் ஆழ்த்தின.

''என்னை மன்னிச்சுடுங்க. ஆண்டவனையே பூட்டி வைக்க வேண்டிய காலம் இது!''

**ம**றுபடியும் பஞ்சாயத்துத் தொடங்கியது. இப்போது பண்ணையாருக்குப் பதில் வேறொரு வர் உட்கார்ந்திருப்பதைக் கண்ட மக்களின் ஐயத்தைப் பூவராகன் போக்கினார்.

''நமது பண்ணை தாமாகவே விலகிக் கொண்டு இருக்கிறார். இது அவரது குடும்பம் பற்றிய வழக்கு என்பதால் பஞ்சாயத்து அவர் நேர்மையைப் பாராட்டுகிறது.''

யாரோ ஒருவன், ''பண்ணையார்'' என்று கத்த, கூட்டம், ''வாழ்க!'' என்றது. எல் லாம் முன்னேற்பாடா? பொன்னு கலக்கத் துடன் சுற்றிவரப் பார்த்தாள். நியாயத்தின் வாயில் துணி அடைக்கப்பட்டு விடுமோ என்று பயம் தோன்றியது அவளுக்கு. பண் ணையார் என்ன சாதாரணமா?







பொன்னு முன்வந்தாள்.

''இது அவர் கட்டின தாலிதாங்க! தயவு செய்து என் கணவரை எனக்கே தாங்க, ஐயா!''

''பண்ணையார், நீங்க என்ன சொல்றீங்க?'' என்றார் தலைவர்.

பண்ணையார் பணிவுடன் எழுந்து கொண் டார்.

''ஐயா, இந்தத் தாலி எப்பக் 'கட்டப் பட்டதுன்னு கேக்கறீங்களா கொஞ்சம்?'' என்றார் கொஞ்சம்கூடப் பணிவு குறையாமல். அவர் விரிக்கும் வலையை உணராமல் பொன்னு கூவினாள்:

''வெள்ளிக் கிழமை ராத்திரிங்க...''

''ஐயா, வெள்ளிக் கிழமை காலம்பறத் தான் என் பையன் ஊரை விட்டுப் போனான். பட்டணத்திலே போய் ரயிலில் ஏத்திவிட்ட சாட்சிகூட இருக்குங்க.''

பொன்னு தலையைக் குனிந்து கொண்டாள். புலியுடன் போராடத் துடித்த புள்ளிமானைக்

கவலையுடன் பார்த்துக் கொண்டிருந்தேன், நான்.

''பொன்னு, பண்ணையார் சொன்னதைக் கேட்டியா? நீ என்ன சொல்றே? ஏதாவது சாட்சி இருக்கா, உனக்கு?''

எனக்கு வியர்த்தது. இதோ என்னை மாட்டிவிடப் போகிறாள். நான் என்ன செய்யப் போகிறேன்? என்னால் பண்ணையாருக்கு எதிராகச் சாட்சி சொல்ல முடியுமா? என் மனைவிக்குத் திடீர் என்று உடம்பு சரியில்லாமல் போன போது, பட்டணத்துக்குக் கூட்டிப் போக உதவி செய்தவர் பண்ணையார். என் பெண் கல்யாணத்தின் போது, நோட்டு கூட எழுதி வாங்கிக்கொள்ளாமல் பண உதவி செய்தவர் அவர்.

நான் அன்று இரவு போய் எல்லா விஷயங்களையும் விளக்கியவுடன் ஒரு விநாடி துடித்துத்தான் போய்விட்டார் அவர்.

''ஐயரே, இந்தப் பாவிக்காக நான் பெரிய பெரிய மனக் கோட்டை யெல்லாம் கட்டிக்கிட்டு இருக்கேன். இவன் என்னடான்னு திருட்டுத் தாலி கட்டற அளவுக்குப் போயிட்டானு? அதுவும் உங்க முன்னுலேயே....''

நான் மெதுவாக முணு முணுத்தேன்.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

IN-OUT, என்று எழுதுவதற்குப் பதில் NOT-OUT என்று எழுதப்பட்டுள்ளது. இங்கிலாந்திலுள்ள ''லார்ட்ஸ்'' கிரிக்கெட் பெவிலியன் வாயில்களில்!

ஆதாரம் : ஒரு ஆங்கில ஏடு
—திருப்பூர் ''இளமை''

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

''பண்ணைவாள், நடந்தது நடந்துபோச்சு சிறிசுகள்....''

''சிறிச... எவன்யா சின்னவன்! எல்லாம் இவனைப் படிக்க வைச்சதால் வந்த வினை. ஐயரே, நான் இவங்களை விடப்போறதில்லே. இவங்க சேர்ந்து வாழறுங்களா, பார்த்துடறேன். அந்தப் பய எங்கே இருந்தாலும், நாளைச் சாயங்காலத்துக்குள்ளே என் வீட்டிலேயே அவனைச் சிறை வைக்க ஏற்பாடு செய்துடுவேன். இந்தப் பொன்னு பஞ்சாயத்தைக் கூட்டட்டும். நான் அங்கே அவளைக் கவனிச்சுக்கறேன்...''

நான் மௌனமாகக் கேட்டுக் கொண்டேன்.

''ஆனு ஐயரே ஒன்னு.... நீங்க இந்த விஷயத்தை அதாவது திருட்டுத் தாலி விஷயத்தை ஒரேயடியாக மறக்கணும். உங்களைச் சாட்சிக்குக் கூப்பிட்டாக்கூட, நீங்க இல்லேன்னு சொல்லணும்.''

''பண்ணையார்,...''

பண்ணையாரின் முகம் இறுகியது.

''நான் இதுவரைக்கும் உங்களிடம் ஒண்ணும் கேட்டது கிடையாது. இன்று என் குல கௌரவத்துக்காகக் கேக்கறேன். நீங்க மறந்தே ஆகணும். உங்க அன்புக்குப் பாத்திரமான மோகன், கூடத்துல கிடக்கானே, அவன் மேல் ஆணை!''

என் வாயின் மீது விசித்திரமான பூட்டுப் போடப்பட்டது.

''கணபதி விஷயம்.... அவன் ஒத்துக்கணுமே!''

அவர் சிரித்தார்.

''அவனை மாத்த எனக்குத் தெரியும்.. பயத்தாலேயும் 'ஆசையாலேயும் மாருத மனுஷங்களே கிடையாது.''

அவர் சொன்னபடிதான் ஆயிற்று. மறுநாள் மாலைக்குள் கணபதி எப்படியோ வீட்டுக்குள் கொண்டு வரப்பட்டான். அதற்கு மறுநாளே பொன்னுவை மறந்துவிடுவதாக ஒப்புக் கொண்டான். அவனைக் கிராமத்தை விட்டு வெளியே அனுப்பலாமா என்று யோசித்தார் பண்ணையார். பின்னர் வீட்டுக்குள் ஒளித்து வைப்பதுதான் சரி என்று தீர்மானித்தார்.

எனக்கு வேடிக்கையாக இருந்தது.

''என்னது, நிஜமாகவே பொன்னுவை மறக்க ஒத்துண்டானு?''

பண்ணையார் சிரித்தார்.

''அவன் என் பையனுச்சே! புத்திசாலி. அதான் நல்லதை ஒத்துக் கொண்டான். காதல்னு சொத்து வருமா, சுகம் வருமா?''

'ம்,... இவ்வளவுதான் காதலா!' நான் பொன்னுவுக்காகப் பரிதாபப்பட்டேன்.

பொன்னு என்னை நிமிர்ந்து பார்த்தாள். நான் தலையைக் குனிந்து கொண்டேன்.

''மாசனங்களே! நான் ஒரு பெரியவரை ஆண்டவன்னு நினைச்சு அவர் சாட்சியாகத் தான் தாலியைக் கட்டிக்கிட்டேன். அவர் இப்ப நிஜமாகவே ஆண்டவன் ஆயிடுவாரோன்னு பயமா இருக்கு. ஆண்டவனைச் சாட்சிக்குக் கூப்பிட்டா வருமா என்ன?''

''பொன்னு!'' — மருது அதட்டினுர்.. ''புதிர் எல்லாம் போடாமல் ஒழுங்காய்ப் பேசு!''

''எனக்குள்ள ஒரே சாட்சி ஆண்டவனு நம்பிய ஐயர் தாங்க!''

கூட்டத்தின் பார்வை என்மேல் குவிந்து என்னை ஒரு ஞானக் குருக்கிட்டு போல் தோன்றியது.

''பொன்னு, உனக்கென்ன மூளை சரியில்லையா? பஞ்சாயத்தை என்ன இன்னுக் கிளைன்னு நினைச்சுட்டியா?'' என்றார் பூவராகன் கோபத்துடன்.

''சாமி சத்தியமா இவங்க முன்னிலையில்தான் என் கணவர் தாலி கட்டினுருங்க.''

பூவராகன் என் பக்கம் திரும்பினுர். நான் எழுந்து நின்றேன். கால்கள் துவண்டன. உண்மைக்கு இத்தனை வலிமையா? 'இல்லை, இவள் சொல்வது பொய்' என்று கூவ எண்ணினேன். என் நாக்குக்கு என்ன ஆனது? அசைய மறுத்தது. மூளை சலனமற்றுப் போய் விட்டதா? ஒரு பொய்யைப் பேசுவதற்கு இத்தனை பிரசவ வேதனையா?

நான் பொன்னுவைப் பார்த்தேன். அவள் முகம் 'எது வேண்டுமானாலும் நடக்கட்டும்' என்ற எதிர்பார்ப்பற்ற நிலைக்கு வந்துவிட்டது. என் பார்வையைப் பண்ணையார் பக்கம் திருப்பினேன். அவர் கண்களின்



# சினிமா! சினிமா!

ஷாலிமார் படம் எடுத்த டைரக்டர் கிருஷ்ணஷா 'சினிமா சினிமா' என்று ஒரு படம் எடுத்திருக்கிறார். இந்தி மசாலா படங்களைப் பற்றிய படம் இது.

இந்தப்படம் நன்றாக இருக்கிறது என்று சொல்லப்படுகிறது.

ஃபிலிம் இண்டஸ்ட்ரீஸ் ஜர்னல்
—பாலி

ஆழத்தில் தெரிந்த அவ்வுணர்ச்சிகள் என்னை உலுக்கின.

என்னைக் காப்பாற்ற யாரும் இல்லையா? பொய் சொல்லவும் துணிச்சல் இல்லாமல் உண்மை பேசவும் இயலாமல்....

கடைசியில் என்னைத் தயார் செய்து கொண்டேன்.

அமைதி மிகவும் கனமாக இருந்தது. என் வாயில் இருந்து வரப் போகும் வார்த்தைகள் தாம் பொன்னுவின் வாழ்க்கைக்கு ஒரே ஆதாரம்.

''பொன்னு நீ சொல்றது....''

யாரோ என்னைப் பின்பக்கம் இழுப்பது போலப் பட்டது. திடுக்கிட்டுத் திரும்பினேன்.

மோகன்!

என் கண்கள் வியப்பினால் விரிந்தன. இன்று காலைகூட மிகவும் களைத்துப் போய்ப் படுத்திருப்பதாகப் பண்ணையார் சொன்னாரே, மோகனைப் பற்றி.

''தாத்தா பொய்யா சொல்லப் போறே?'' அவன் சொன்ன ஒவ்வொரு வார்த்தையும் என்னை ஆக்கிரமித்தது.

''மோகன்!'' — நான் கூவினேன்.

''மோகன்!'' என்ற பண்ணையார் குரலும், ''கணபதி அய்யா!'' என்ற மக்களின் ஆச்சரியக் குரலும் என்னைத் திருப்பின. என்ன இது?

கணபதி அசைவற்ற மோகனின் உடலைப் பண்ணையாரின் முன்னிலையில் கிடத்தினான்.

எனக்குத் தெரிந்த மோகனின் உருவம் வெறும் பிரமையா!

''அப்பா, என் மனசை மாத்திட்டதாச் சந்தோஷப்பட்டீங்களே! இப்ப உங்க அருமைப் பேரனே பலியாயிட்டானே என்ன செய்யப் போறீங்க?''

என் உடல் ஒரு முறை நடுங்கி அடங்கியது. மோகன் மடிந்து விட்டானா? பண்ணையார் கல்லாகி நின்றார்.

கணபதி விவரித்தான்.

மோகன் ஜுரக் கலக்கத்தில் எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்திருக்கிறான். இன்று, கொஞ்ச நேரத்துக்கு முன்னால், எழுந்து கொண்டு, எங்கோ செல்பவனைப் போலத் தட்டு தடுமாறிக் கொண்டிருந்தவனைப் பார்த்தான் கணபதி.

''மோகன் போய்ப் படுத்துக்கோ! உனக்கு உடம்பு இன்னும் சரியாகல்லே.''

''யாரு, சித்தப்பாவா?''

''ஆமாம். போய்ப் படு!''

''நீ பஞ்சாயத்துக்குப் போகல்லே?'' — மோகனின் கேள்வியைக் கேட்ட கணபதி அசந்து போனான்.

''மோகன், நீ சின்னப் பையன். உனக்கு எதுக்கு இந்த வீண் கவலை? போய்ப் படு!''

''நீங்க எல்லாம் அங்கே பொய்தானே சொல்லப் போறீங்க? நான் எல்லாம் கேட்டுக்கிட்டு இருந்தேன் சித்தப்பா. வா, போகலாம். போய், எனக்குக் கதை சொல்வாரே அந்தத் தாத்தாவைப் பொய் சொல்லாதே என்று சொல்லலாம்'' என்றான் மோகன்.

கணபதி பயந்து போனான். இது என்ன விபரீதம்? இவனைச் சின்னப் பையன் என்று விட்டு விடுவதா? அவன் யோசித்து முடிப்பதற்குள் விபரீதம் நிகழ்ந்து விட்டது.

''சித்தப்பா, நீ வராட்டிப் போ! நான் போறேன்!''

ஓடி வந்த மோகனின் கால் இடறி, வாசற்படிகளில் உருண்டவன், அங்கிருந்த பாறை ஒன்றில்....

''மோகன்!'' — அலறினார் பண்ணையார்.

நான் கண்களைத் துடைத்துக் கொண்டேன்.

''அய்யரே! நம்ப மோகனே வைச்சு அந்த ஆண்டவன் பழி வாங்கி விட்டான் நம்பளை. என் இதயம் வெடிச்சுடும் போல இருக்கே. இனிமே எந்தக் குழந்தையைப் பார்த்துச் சந்தோஷப்படுவேன்? வீடே சூன்யமாயிடுமே அய்யா! என்ன பிராயச்சித்தம் பண்ணாக்கூட மோகன் வரமாட்டானே...''

நான் பண்ணையாரின் தோளைத் தட்டிக் கொடுத்தேன்.

''மோகன் நம்மை விட்டுப் போனது ஒரேயடியாப் போறதுக்கு இல்லை பண்ணையார்! நம்ப மண்ணிலே எப்பல்லாம் சத்தியத்துக்கு அவசியம் வருமோ அப்பல்லாம் சத்தியம் மறுபடியும் மறுபடியும் பிறந்துக்கிட்டுத் தான் இருக்கும்.''

பண்ணையார் புரிந்து கொண்டவர் போல என்னைப் பார்த்துத் தலையாட்டினார்.



தாய்ப்பாசம் படத்தில் பிரமீளாவுடன் சிவகுமார்

# சிவகுமார்ம

## 51 – 60

**கண் மணி ராஜா :** கிசுகிசுக்கள் நட் நடிகர் நடிகைகளை மட்டுமல்ல; படத்தையும் பாதிக்கிறது என்பதற்கு இப்படத்தை உதாரணமாகக் கொள்ளலாம். படம் வெளிவந்து ஓடிக் கொண்டிருக்கும்பொழுது இப்படத்தின் ஒரு நடிகை பற்றி ஒரு மாலை தினசரிப் பத்திரிகையில் ஒரு கிசுகிசு வந்திருந்தது. அது உண்மையா பொய்யா என்பது வேறு விஷயம். படத்தைப் பார்த்துக் கொண்டிருந்த ரசிகர்கள் தியேட்டரில் அடித்த 'காமெண்ட்' என்னை உண்மையாகவே அதிர்ச்சி யடையச் செய்தது.

**தீர்க்க சுமங்கலி :** பல புராணப் படங்களில் எனக்கு ஜோடியாக நடித்த கே. ஆர். விஜயா இப்படத்தில் எனக்குத் தாயாக நடித்தார். உடலமைப்பால் வயதானவராக அவரைக் காட்ட முடியாது. இதன் விளைவு நடிப்பால் மட்டுமே தாய் மகன் என்று காட்டினோம். ஒரு கட்டத்தில் தாயும் மகனும் ஆரத் தழுவிக் கொள்ளும் காட்சி. தியேட்டரில் ஒரு ரசிகன் விசிலடித்திருந்தாலும் படம் தோல்வியைத் தழுவி யிருக்கும். நல்லவேளை அப்படி நேரவில்லை.

**வெள்ளிக்கிழமை விரதம் :** தேவர் பிலிம்ஸில் நடிப்பவர்கள் எல்லோரும் எப்பொழுதுவேண்டுமானாலும் எவ்வளவு வேண்டுமானாலும் முன்பணமாகப் பெற்றுக் கொள்ளலாம். ''எனக்குத் திருமணம் நடக்க இருக்கிறது· என் சம்பளப் பணத்தை வைத்து நீங்களே முன்நின்று என் திருமணத்தை நடத்திக் கொடுங்கள்'' என்றேன்.

ராஜேஸ்வரி கல்யாண மண்டபத்தில் எனது திருமண வரவேற்பை முன் நின்று நடத்தினார்; அதே நாள் பிற்பகல் ஒரு மணிக்கு கோவையில் அவரது மாமியார் மறைந்து விட்டார் என்ற செய்தி வந்து கூட மாலை வரை சென்னையில் என் ரிசப்ஷனில் இருந்து ஆசீர்வதித்து விட்டுச் சென்றார். இத் துயரச் செய்தியே அடுத்த நாளைக்குத்தான் எனக்குத் தெரிந்தது.

திருமணத்துக்குப் பிறகு ஒரு நாள் அவரிடம் கைமாற்றாக வாங்கியிருந்த 15,000 ரூபாயை எடுத்துக் கொண்டு சென்றேன். ''அடேயப்பா!'' என்றார் தேவர். ''எத்தனை லட்சங்களைக் கொடுத்து நடிக நடிகையருக்கு உதவி செஞ்சிருக்கேன். இது போன்ற சிறு தொகையைத் திருப்பித் தந்து என்னை யாருமே அவமானப்படுத்தியதில்லை!'

இதைவிட அவரிடத்தில் வேறு என்ன பாராட்டை நான் பெற வேண்டும்?

**குமாஸ்தாவின் பெண் :** எம். வி. ராஜம்மா, டி. கே. ஷண்முகம் ஆகியோர் நடித்த அதே படத்தை அதே பெயரில் திரும்பவும் எடுத்தார் திரு ஏ. பி. என். காலத்துக்கேற்ப ரசனை மாறி வருகிறது என்பதை இப்படம் தன் தோல்வியால் நிரூபித்தது.

**ஒன்னே ஒன்னு கண்ணே கண்ணு :** நடித்தால் கதாநாயகனாக நடிப்பது இல்லை என்றால் நடிக்கவே வேண்டாம் என்று என்னை முடிவெடுக்கச் செய்தது பொண்ணுக்குத் தங்க மனசு படத்தின் வெற்றி. அந்தச் சமயத்தில் ஒப்பந்தமானது இப்படம். இதன் நாயகி இப்படத்துக்குப் பிறகு பதினாறு படங்களில் என்னோடு ஜோடியாக நடித்தார். அவர்தான் ஜெயசித்ரா.

**பாத பூஜை :** வெள்ளி விழாப் படங்கள், 100 நாள் படங்கள் என்று தொடர்ந்து வெற்றிப் படங்களையே அளித்து வந்தும் ''தான்'' என்ற மமதையும் தலைக் கனமும் இல்லாதவர் மறைந்த இயக்குனர் பீம் சிங்.



வெள்ளிக்கிழமை விரதம் படத்தில்
ஜெயசித்ரா, சிவகுமார்

அவர் டைரக்‌ஷனில் நடிக்க வேண்டும் என்று என் ஆசையைப் பூர்த்தி செய்தது இப் படம். ஒரு காட்சி, அதன் உணர்ச்சி — இது எப்படி இருக்க வேண்டும் என்று சொல் வாரே தவிர இப்படித்தான் நடிக நடிகையர் நடிக்க வேண்டும் என்று வற்புறுத்த மாட் டார். நடிக்கும்பொழுது இரண்டாவது டேக் என்றாலே பல இயக்குனர்களுக்குக் கோபம் பொத்துக் கொண்டு வரும். ஒரு நாள் ஒரு நடிகைக்குப் பன்னிரண்டு டேக் ஆகியும் சரியாக நடிக்க வரவில்லை. கோபம் வரவேண்டுமே? சிரித்துக் கொண்டே இருந் தார் பீம்சிங்.

**எங்கம்மா சபதம் :** இது பெண்கள் சப் ஜெக்ட் என்று எங்களுக்குத் தெரிந்தவுடன் காட்சிக்குக் காட்சி போட்டி போட்டுக் கொண்டு நடித்தோம்.

ஒரு வாரப் பத்திரிகை தன் விமரிசனத்தில் ''ஆண் வர்க்கத்துக்கே அவமானத்தைத் தேடித் தரும் வகையில் முத்துராமனும் சிவகுமாரும் நடித்துள்ளார்கள்'' என்று எழுதியிருந்தது. அதற்கு ஒரு ரசிகர், ''பத்திரிகை துவங்கிய நாளிலிருந்து பெண் களின் படத்தையே வெளியிடும் உங்களுக்கு ஆண் வர்க்கத்தைப் பற்றிப் பேச என்ன யோக்யதை இருக்கிறது?'' என்று ஆசிரி யருக்குக் கடிதம் எழுதிக் கேட்டார். ரோசத் தோடு ஓர் ஆண்மகனின் — கண்ணதாசனின் படத்தை அடுத்த வாரத்தில் அட்டையில் வெளியிட்டிருந்தார் பத்திரிகை ஆசிரியர்.

**பணத்துக்காக :** ஜுபிடர் பிக்சர்ஸ் திரைப்பட உலகில் எல்லோரும் அறிந்த ஒன்று. இதன் உரிமையாளராக இருந்த திரு சோமுவின் புதல்வர்களில் ஒருவர் எம். எஸ். செந்தில். இப்படம்தான் செந்திலைத் தயாரிப்பாளர் — டைரக்டராக்கியது.

**தாய்ப் பாசம் :** தேதி கொடுத்துவிட் டால் வேலைக்குப் போகாமல் இருக்க மாட் டேன். இது என் கொள்கை. முதல் நாள் படப் பிடிப்பில் கலந்து கொள்ள வேண்டும். அதற்கு முதல் நாள் காட்பாடியில் ''அப் பாவி'' நாடகம். சென்னையிலிருந்து காட் பாடிக்குக் கிளம்பும்போதே வயிற்றுப் போக்கு. கஷ்டப்பட்டு நாடகத்தில் நடித் தேன். திரும்பவும் சென்னை வந்து மறுநாள் காலை ஏழரை மணிக்கு முதல் காட்சி பூஜை. திரும்பவும் மாலையில் ''அப்பாவி'' நாடகம். கிட்டத்தட்ட நினைவிழந்த நிலையில்தான் நான் நடித்தேன். மறக்க முடியுமா என்ன?

**எங்க பாட்டன் சொத்து :** காமிரா மேதை கர்ணன். அவர் தயாரிப்பாளராக வும் இயக்குனராகவும் மாறினார். அவருக் காக நடிக்க எனக்கு வாய்ப்புக் கிடைத்தது இப்படத்தில்தான். பேட்டி: **''சலன்'**



பாத பூஜையில்
ஜெயசித்ராவுடன்

கண்மணி ராஜாவில்
லக்ஷ்மி, சிவகுமார்



# யுகங்கள் மாறும்போது

வாஸந்தி

## 7

சமையலறை வாஷ் பேஸினில் குழாய் ஒழுகிக் கொண்டேயிருந்தது. அவசரம் அவசரமாக நளினியின் பழக்கமில்லாத கைகள் காலைச் சிற்றுண்டியைத் தயார் செய்வதில் ஈடுபட்டிருந்தன. குழாய் ஒழுகும் சத்தம் ஒரு நமைச்சலை ஏற்படுத்திற்று. செய்யும் வேலையில் அவள் கவனத்தைக் கலைக்கிற மாதிரி. சாம்பாருக்கு உப்புப் போட்டோமா இல்லையா என்று மறந்து விட்டது. கொஞ்சம் ஸ்பூனில் எடுத்துச் சாப்பிட்டுப் பார்த்தாள். போடவில்லை. 'ஓ! இந்தக் குழாயின் இரைச்சல்! காரியம் கெட்டுப் போவதெல்லாம் இந்தக் குழாயின் இரைச்சலினால்தான்' என்று அவளுக்கு ஆத்திரம் வந்தது. நான்கு நாட்களாக அவள் அசோக்கிடம் சொல்லிக் கொண்டிருக்கிறாள், அதற்கு வாஷர் மாற்ற வேண்டும் என்று. இதோ அதோ என்று அவன் தட்டிக் கழித்துக் கொண்டிருந்தான். கல்யாணமாகி இந்த ஆறு மாதங்களில் அவன் ஒரு படு சோம்பேறி என்று தெரிந்துகொண்டிருந்தாள். அவன் ஆஃபீஸ் போய்விட்டு வருவதே பெரிய காரியம் என்று தோன்றிற்று. இவனிடம் சொல்லிப் பிரயோசனமில்லை; தானேதான் அம்மாவிடம் சொல்லி ஓர் ஆளை அனுப்பச் சொல்ல வேண்டும் என்று நினைத்துக் கொண்டாள். உள்ளே இருந்து அசோக் உரக்கக் கேட்டான்.

''நளினி, இன்னும் டிபன் ஆகல்லியா? நீ பண்ணி முடிக்கிறதுக்குள்ளே ஆபீஸிலே லஞ்ச் டைம் வந்துடப் போறது.''

''இதோ, இதோ ஆச்சு!''

நளினி பரக்கப் பரக்க மேஜையின் மேல் எல்லாவற்றையும் கொண்டு வந்து வைத்தாள்.

அசோக் ஆபீசுக்குப் போகத் தயாராக உடுத்திக் கொண்டிருந்தான்.

சாப்பிட உட்கார்ந்து கொண்டே, ''சாயங்காலம் வெளியிலே சாப்பிடலாமா?'' என்று கேட்டான்.

''ஓ, யெஸ்!'' என்றாள் அவள் சந்தோஷத்தோடு.

''என் சமையலைச் சாப்பிட்டு எனக்கே அலுத்துப் போச்சு.''

''எனக்கு எப்படி இருக்கும் பார்'' என்றபடி எழுந்தான் அவன். ''உன்னை ஒரு நாளைக்குச் சமைக்கச் சொல்லிப் பார்த்தப்புறம் நான் கல்யாணத்துக்குச் சம்மதிச்சிருக்கணும். உன்னுடைய 'லுக் அட்மீ'யைப் பார்த்து மயங்கிப் போனேன்!''

அவள் கலகலவென்று சிரித்தாள். வாஸ்தவத்தில் அவனுக்கு அவளிடம் எத்தனையோ குறைகள் தெரியலாம் என்று நினைத்துக் கொண்டாள். அவளுக்கு அவனிடம் இப்பொழுது தெரிகிற மாதிரி....

அவனுடைய ஸ்கூட்டர் கிளம்பியவுடன் அவள் உள்ளே வந்து மேஜையைச் சுத்தம் செய்தாள். சமையல் சாப்பாடு முடிந்ததும் தினமும் என்ன செய்வதென்றே புரியவில்லை. எத்தனை நேரம் தூசி தட்டுவது?, வீட்டை அலங்கரிப்பது, புத்தகம் படிப்பது?

ஒரு நாளைக்கு இரவு படுத்துக்கொண்ட பின் அவள் அசோக்கிடம் சொன்னாள்:

''எனக்கு வீட்டிலே ரொம்ப போர் அடிக்கிறது அசோக். நானும் ஏதாவது வேலைக்குப் போகலாம்னு பார்க்கிறேன்....''

அவன் சில விநாடிகள் பேசாமல் இருந்தான். பிறகு ஒரு வித சோம்பலுடன் சொன்னான்: ''அதுக்கெல்லாம் அவசியமில்லே நளினி.''

''எனக்கு ரொம்ப போரடிக்கிறது. நாள் முழுக்க என்ன செய்யறது?''

''ஏதாவது செய்யறது. அதை நீயேதான் கண்டுபிடிச்சுக்கணும். உங்கம்மா என்ன செஞ்சா, உங்க பாட்டி என்ன செஞ்சா?''

''மை காட்! பாட்டி மாதிரி என்னை இருக்கச் சொல்றியா? நான் முழுக்கச் சமைச்சுண்டு, சமையலைத் தவிர வேறே யோசனை இல்லாமெ....?''

''இருந்தா என்ன தப்பு? உன் சமையல் கொஞ்சம் இம்ப்ரூவ் ஆகும்.''

அவனுடைய பரிகாசம் அவளுக்கு ரசிக்கவில்லை.

''என்னாலே எங்க பாட்டி மாதிரி இருக்க முடியாது அசோக். அவ உலகத்திலேயிருந்து நான் ரொம்ப தூரம் வெளியிலே வந்தாச்சு.''

''அது என்னவாயிருந்தாலும் சரி. நீ வேலைக்குப் போறது எனக்கு இஷ்டமில்லே. தட் இஸ் ஆல்.''

''நானும் வேலைக்குப் போனால் கொஞ்சம் பணம் சேர்க்கலாம்.''

''நீ சம்பாதிக்கத்தான் பணம் சேர்க்கணுமா என்ன? உங்கப்பாவுடைய எக்கச்சக்க சொத்தெல்லாம் யாருக்குப் போகப் போகிறது? உனக்கும் மாலாவுக்கும்தானே?''

சட்டென்று மனசில் ஓர் அபஸ்வரம் ஏற்பட்ட மாதிரி இருந்தது.

அவன் யதார்த்தமான விஷயத்தைச் சொல்கிற மாதிரி சொன்னாலும் இந்த எண்ணம், அப்பாவின் சொத்தைப் பற்றிய நினைப்பு இவனுக்கு எத்தனை நாட்களாக மனத்தில் இருந்திருக்கும் என்று அவள் நினைத்துக்கொண்டாள். இதற்காகவே தன்னைச் சுற்றிக் கொண்டிருந்தானோ என்று தோன்றியது. மனசில் லேசாக ஓர் அதிர்ச்சி ஏற்பட்டது. சட்டென்று அவள் தன்னைச் சமாளித்துக் கொண்டாள். இந்த மாதிரியெல்லாம் அவனைப் பற்றி நினைப்பதும் எடைபோடுவதும் எந்த வகையிலும் லாபமில்லை என்று நினைத்துக் கொண்டாள். அவன் பேசியது யதார்த்தமானது. அவன் நிலையில் யாராக இருந்தாலும் பேசக் கூடிய வார்த்தைகள்.....

அவன் பேசிய விதம் அவளுக்கு ஒரு லேசான சிற்றத்தை ஏற்படுத்தியது. எத்தனை எதிர்பார்ப்புக்கள் இவனுக்கு என்று தோன்றியது. பாட்டி மாதிரி சமைக்க வேண்டும்... வாயை மூடிக் கொண்டிருக்க வேண்டும். 'நாலு பேர் முன்னிலையில் என்னுடைய உடைமையைப் பார்த்தீர்களா?' என்று இவன் காண்பிப்பதற்காக நாகரிகமாக உடை உடுத்திக் கொண்டு இவனோடு வெளியில் போக வேண்டும்.... இவன் கூப்பிட்டவுடன் படுக்கைக்குச் செல்ல வேண்டும். மூளைக்கு வேலை இல்லாததால்தான் இப்படியெல்லாம் புத்தி பேதலிக்கிறது என்று நினைத்துக் கொண்டாள். சாப்பாட்டு மேஜை மேல் இருந்த பழக் கூடையைப் பார்த்து மேஜை மேலேயே, கான்வாஸை வைத்துக் கொண்டு படம் வரைய ஆரம்பித்தாள். சிறிது நேரத்தில் சமையலறைக்குச் சென்று கொஞ்சம் சாப்பிட்டு வந்தாள். மறுபடியும் சித்திரத்துக்கு உட்கார்ந்ததும் உலக ஞாபகங்கள் அதன் கசப்புகள் அசிங்கங்கள் அறவே மறந்துபோயிற்று. மனசு ஆகாசத்தில் மிதந்தது.... அழைப்பு மணியோசை கேட்டதும்தான் அவள் மாலையாகி விட்டதை உணர்ந்தாள். இன்னும் முகம் கூடக் கழுவிக் கொள்ளவில்லை என்று நினைத்துக் கொண்டே வாசல் கதவைத் திறந்தாள். அசோக்குடன் அவனுடைய சிநேகிதன் கௌசிக் நின்றிருந்தான்.

''ஹலோ!'' என்றான் கௌசிக்.

''ஹல்லோ!'' என்றாள் அவள் பளிச்சென்று சிரித்துக் கொண்டு

அசோக்கின் முகத்தில், லேசாகச் சிடுசிடுப்புத் தெரிந்தது.

அவள் சிரித்துக் கொண்டே சொன்னாள்: ''இன்னிக்கு ஏதோ பெயின்ட் பண்ணிண்டிருந்தேன். நேரம் போனதே தெரியல்லே!''



"அப்படியா, எங்கே உங்க பெயின்டிங்?" என்றபடி கௌசிக் உள்ளே எட்டிப் பார்த்தான்.

சாப்பாட்டு மேஜையின் மேல் இருந்த சித்திரத்தைப் பார்த்து, "வவ், நீங்க செஞ்சதா இது?" என்று கண்களை அகல விரித்தான். அவனுடைய புகழ்ச்சி அவளுக்குக் கூச்சமாக இருந்தது. இதமாக இருந்தது. அசோக் எதுவுமே சொல்லவில்லை. "சாப்பிட ஏதாவது கொண்டு வா" என்றான். அவளைப் பார்த்து. அவனுடைய அலட்சியத்தைப் பாராட்டாமல் அவள் டீ போட்டு பிஸ்கெட்டுகளையும் கேக் துண்டங்களையும் கொண்டு வந்து வைத்தாள். டீ குடித்தவுடன் அசோக் அவளைப் பார்த்து, "போய் டிரஸ் பண்ணிக்கோ. நாம் மூணு பேரும் வெளியிலே போயிட்டு அப்படியே சாப்பிடப் போகலாம்" என்றான்.

"சரி" என்று அவள் காலிக் கோப்பைகளையெல்லாம் எடுத்துக் கொண்டு உள்ளே போனாள்.

கண்ணாடிக் கெதிரே தலை வாரிக் கொள்ளும் போது அசோக் உள்ளே வந்தான். அவளைப் பார்த்து மெல்லிய குரலில் "ஒழுங்கா டிரஸ் பண்ணிண்டு வா. இப்படியெல்லாம் ஜீன்ஸ் போட்டுண்டு வரதானால் என்னோடு வராதே!" என்றான். அவள் திடுக்கிட்டுப் போய் அவனைப்





# குழந்தைப் பாட்டி!

படத்தில் அமர்ந்திருக்கும் பெண்ணி லான்டையுக்கு வயது ஐந்துதான் ஆகிறது. ஆனால் அவள் தோற்றமும் உடல்நிலையும் அறுபது வயதும் பாட்டியுடையதா யிருக்கிறது. மிகவும் வயதானவர்களுக்கு ஏற்படக் கூடிய காடராக்ட், ரத்த அழுத்தம் போன்ற கோளாறுகள் இவளுக்கு உள்ளன. பார்ப்பதற்கும் பாட்டி போல் இருக்கிறாள். இது ஒரு நோய். இதற்கு ''காகெய்ன்ஸ் ஸின்டிரோம்'' என்று பெயர். இந்நோய் கண்டவர்கள் படிப்படியாக மூப்படைவதற்குப் பதில் கட்டுமீறி வெகு சீக்கிரம் கிழவன் அல்லது கிழவியாகி விடுகிறார்கள். அபூர்வமான இந்த நோயினை உலக மருத்துவ சரித்திரம் ஐம்பது பேர்களிடமே கண்டிருக்கிறது என்கிறது நியூஸ் வீக். நமக்கு ஔவைப் பாட்டி கதை ஞாபகம் வருகிறதல்லவா?

---

பார்த்தாள். அவனது பார்வையிலும் குரலிலும் ஒரு சீற்றம் தெரிந்தது. அவள் வாயைத் திறந்து ஏதோ சொல்ல முயலுகையில் அவன் அறையை விட்டு வெளியேறினான். அவளுக்கு அவமானத்தினால் முகம் சிவந்தது. அவள் கல்யாணமானதிலிருந்து வெளியில் போகும்போது புடவைதான் கட்டினாள். வீட்டிலிருக்கும்போது எப்பவாவதுதான் ஜீன்ஸ் போட்டுக்கொண்டாள். இன்றைக்குப் பெயின்ட் செய்யும்போது இந்த உடை சௌகரியமாக இருக்கும் என்ற எண்ணத்தில் உடுத்திக் கொண்டிருந்தாள். கௌசிக் எதிரில் தான் அப்படி வந்தது அவனுக்குப் பிடிக்கவில்லை என்று தோன்றிற்று. இவன் இவ்வளவு மாறிவிட்டானே என்று அவளுக்குத் திகைப்பாக இருந்தது. இன்றைக்கு நடந்தது எதேச்சையானது என்று தெரிந்தும் அவன் அப்படிப் பேசியது அவளுக்கு அநாகரிகமாகத் தோன்றியது.

இன்றைக்கு வெளியில் சாப்பிடுவது ஒரு முன்னேற்பாடு என்று அவள் அங்கு சென்றதும் புரிந்து கொண்டாள். அவளுக்குத் தெரியாத இன்னும் நான்கைந்து பெண்கள் வந்திருந்தார்கள். அசோக் அவர்களுடைய பெயரை மட்டும் குறிப்பிட்டு அவளுக்கு அறிமுகம் செய்தான். அவர்களுடைய நடையும் உடையும் நளினிக்கு மட்டமாகத் தோன்றியது. தன் உடையைப் பற்றி அசோக் இன்று பேசியது நினைவுக்கு வந்ததும் அவளுக்கு ஆத்திரம் ஏற்பட்டது. இவர்கள் எப்படி உடையணிந்திருக்கிறார்கள்? வேண்டுமென்றே தங்கள் கவர்ச்சியைக் காண்பிக்கிற மாதிரி! அவர்களோடு அசோக் மிகவும் நெருக்கமாகப் பழகினான். ரொம்பவும் நாகரிகமாக அவர்களது இடையைப் பற்றியபடி பேசினான். தோளைப் பற்றியபடி பேசினான். அவள் அதைக் கவனிக்காத மாதிரி இருந்தாள். இதை யெல்லாம் நாம் விகல்பமாக நினைக்கக் கூடாது என்று தன்னையே சமாதானப் படுத்திக் கொண்டாள். இப்படி நினைக்க ஆரம்பித்தால் தனக்கும் கௌசல்யா மாமிக்கும் வித்தியாசம் இருக்காது என்று தோன்றிற்று.

அன்று இரவு அவன் அவர்களைப் பற்றி விசாரித்தாள். பம்பாயில் தன்னோடு படித்தவர்கள் என்றான். இங்கே கம்பெனியில் வேலையா யிருக்கிறார்கள் என்றான். மேற்கொண்டு எதுவும் கேட்டால் அநாகரிகம் என்று அவள் பேசாமல் இருந்தாள். இப்பொழுதெல்லாம் அவளுக்கு எந்தக் கேள்வியைக் கேட்கவும் ஆயாசமாக இருந்தது. கேள்விக்கு எந்த மாதிரிப் பதில் வருமோ அதைக்கேட்டுத் தனக்குச் சஞ்சலமேற்படுமோ என்றிருந்தது. சட்டென்று அவளுக்கு அம்மாவின் ஞாபகம் வந்தது. அம்மா அவரிடம் வாயே திறக்காமல் இருந்தது இதனால்தானோ என்று தோன்றிற்று. தோன்றியதும் லேசாக ஓர் அதிர்ச்சி ஏற்பட்டது. நாமும் அம்மா மாதிரி ஆகிவிடுவோமோ? புருஷன் எது வேண்டுமானாலும் செய்யட்டும். கேள்வி கேட்டால் விரசமாகிப் போகும் என்று பேசாமல் இருக்க ஆரம்பித்து விடுவோமோ?

அன்றைக்கு அசோக் ஆபீசுக்குப் போனதும் அவள் அம்மாவைப் பார்க்க வேண்டும் என்று கிளம்பினாள். அம்மாவை நினைத்ததுமே மனசில் ஓர் அன்புப் பிரவாகம் எழுந்தது. இப்பொழுது தன் மனத்தில் தோன்றும் ஏமாற்றங்களெல்லாம் அம்மாவுக்குத் தெரிந்தால் அம்மா அதிர்ந்து போய்விடுவாள் என்று தோன்றிற்று. அம்மாவும் கஸ்தூரியும் ஆசார உபசாரம் செய்தார்கள்.

''உன் சமையலைச் சாப்பிடாமல் நான் ஏங்கிப் போயிட்டேன் கஸ்தூரி!'' என்று சொன்னபோது கஸ்தூரியின் கண்களில் கூட நீர் துளிர்த்தது.

மாலாவிடமிருந்து கடிதம் வந்திருக்கிறது என்று அம்மா கடிதத்தையும் அதோடு அவள் அனுப்பியிருந்த போட்டோவையும் காண்பித்தாள். மாலாவும் குழந்தையுமாக –இரண்டு ரோஜாப் பூக்கள் மாதிரி – குழந்தையைப் பார்க்கப் பார்க்க நளினியின் கண்கள் கிரங்கிப் போயின.

அம்மா அவளை மெல்லக் கேட்டாள்.

''நளினி, நீ ரொம்ப இளைச்சுப் போயிருக்கியே, ஏதேனும் சமாசாரமா?''

நளினி சிரித்தாள்.

''அதெல்லாம் ஒன்றுமில்லே.''

''பின்னே ஏன் இப்படி இளைச்சிருக்கே?''

''என் சமையல் அவ்வளவு மோசம்!'' அப்பொழுது சிரித்துச் சமாளிக்க முடிந்தது.

வீட்டுக்குத் திரும்பும்போது மனசில் ஓர் ஆயாசம் இருந்தது. நடுநடுவில் மாலாவின் குழந்தையின் ஞாபகம் வந்து கொண்டேயிருந்தது. நமக்கும் அந்த மாதிரி ஒரு குழந்தை பிறந்தால் எப்படி இருக்கும் என்று அவள் கற்பனை செய்து பார்க்கையில் மனசில் ஒரு கிளுகிளுப்பு ஏற்பட்டது.

இப்பொழுதெல்லாம் அசோக் வீட்டுக்கு வரத் தாமதமாயிற்று. 'ஆபீசில் வேலை அதிகம். இன்னும் இரண்டு மாதங்களுக்கு அப்படித்தான் இருக்கும்' என்று சொன்னான். அவள் நிதானமாகச் சமையலைச் செய்து முடித்தாள். பிறகு ஒரு பெயின்டிங்கை எடுத்து வைத்துக் கொண்டு உட்கார்ந்தாள். அவள் அதில் ஆழ்ந்து போய் அமர்ந்திருக்கையில் அழைப்பு மணி ஓசை கேட்டது. அசோக்காக இருக்கும் என்று நினைத்தபடி அவள் பிரஷ்ஷைப் பிடித்தபடியே போய்க் கதவைத் திறந்தாள். கௌசிக் நின்று கொண்டிருந்தான். பிரஷ்ஷைப் பார்த்து உள்ளே நுழைந்து கொண்டே, ''என்ன எப்ப.. பார்த்தாலும் பெயின்டிங்கா?'' என்றான். அவள் சிரித்தாள்.

''அசோக் இன்னும் வரல்லே. பொழுது போகல்லேன்னு உட்கார்ந்தேன்.''

''அசோக் இன்னும் வரல்லியா? அஞ்சு மணிக்கு டாண்ணு கிளம்பிட்டானே வழக்கம் போல!''

அவள் தன் அதிர்ச்சியை வெளிக்குக் காண்பித்துக் கொள்ளாமல் புன்னகைத்தாள்.

''கடைக்கு எங்கேயாவது போயிருப்பார்''

''இருக்கும். நான் வரேன் அப்ப!''

அவளுக்கு இருந்த மனநிலையில் அவனை உபசரிக்கக் கூடத் தோன்றவில்லை.

அவன் சென்ற சிறிது நாழிகைக்கெல்லாம் அசோக் வந்தான். அவள் பேசுமுன் கேட்டான்: ''கௌசிக் வந்திருந்தானா?''

''ஆமாம்.''

''ஏன்?''

''தெரியாது. உன்னைப் பார்க்க வந்திருப்பான்.''

''கதையளக்காதே. எத்தனை நாளா இப்படி வரான்?''

அவள் திடுக்கிட்டு அவனைப் பார்த்தாள்.

''மைகாட்! அசோக்! என்னைப் பார்த்து எப்படி அந்த மாதிரி கேக்கறே?''

அவன் கோபத்துடன் இரைந்து கத்தினான். ''ஏன் கேட்கக் கூடாது? உங்கம்மா மாதிரி தானே நீ இருப்பே? உங்கம்மாவைப் பத்தின கதைகளெல்லாம் எனக்குத் தெரியாதுன்னு நெனைச்சியா?''

அவள் அதிர்ந்து போனாள். (தொடரும்)




பெருந்தவளை கத்துபுனல் பூத்தருவளை
போலக்கண் கொண்டவளை, ராமன் தன்னை
விரும்பிமணம் கொடுத்தவளை, அந்த ராமன்
வில்லொடித்து மணந்தவளை, பல்லாம் முல்லை
அரும்புகின்ற கொடியவளை, அயோத்தி நகரின்
அரண்மனைக்கு வந்தவளை, அழகைக் கூட்டிக்
கரும்பாலே செய்தவளை, மிதிலை மகளை,
கோசலையின் மருமகளை, ஓர்நாள் ராமன்
'பாதங்கள் நோகிறது, அன்பே. சீதா!
பிடித்துவிடு' எனச்சொன்னான், அதனைக் கேட்டுச்
சீதமிகு பூங்குழலாள் வளையல் யாவும்
சீக்கிரத்தில் கழற்றிவைத்துப் பின்னர் வந்தாள்,
வேதங்கள் போற்றுபவன் 'ஏன்ஏன்' என்றான்,
'வளையாவும் கல்வளையல், காலில் பட்டால்
மாதர்களாய்க் கல்லெல்லாம் மாறக் கூடும்,
மன்னவரே!' எனச்சொல்லி நகைத்தாள் சீதை!



அதிர்ஷ்டத்தை
அழைத்து
வரும் தூதன்




# தமிழ்நாடு அரசு பரிசுச் சீட்டு

மற்றும் பல பரிசுகள்

25 வது குலுக்கல் 2 முதல் பரிசுகள்

குலுக்கல் நாள்
21-8-1979




ரூ 50,000

பரிசுத் தொகை ரூ. 15,60,000

மொத்தப் பரிசுகள்: 10620






இயக்குநர்
தமிழ்நாடு பரிசுச் சீட்டுத் திட்டம்
அரசினர் தோட்டம் சென்னை-600 002

EP-DIPR-435

# ராஜாஜி வாழ்க்கை வரலாறு

## ராஜ்மோகன் காந்தி

**கா**ந்தி இர்வின் ஒப்பந்தமானது, பிரிட்டிஷ் ராஜாங்கப் பிரதிநிதிக்கும் — அதாவது வைஸ்ராய்க்கும் காங்கிரஸ் பிரதிநிதிக்கும்— அதாவது மகாத்மாவுக்கும் இடையே உள்ள சமத்துவத்துக்கு அங்கீகாரம் அளித்தது. இதுதான் பாரத மக்களின் மகிழ்ச்சிக்குக் காரணம். சர்ச்சிலுக்கு எந்த விஷயம் மன உளைச்சலைத் தந்ததோ அதுவே பாரத மக்களுக்கு மகிழ்ச்சியை அளித்தது. சம அந்தஸ்துடன் கூடிய பேச்சு வார்த்தைகள் என்பதே காங்கிரஸைப் பொறுத்த மட்டில் எடுத்துக் கொள்ளப்பட்ட பிரயாசைகளுக்குத் தகுந்த, உருப்படியானதொரு வெகுமதியாகிவிட்டது.

மேலும் ஒப்பந்தத்தின் ஐந்தாவது ஷரத்து சட்டமறுப்பு இயக்கத்தைத் தொடர்வதில்லை என்று சொன்னாலும் அதுவே அந்தப் போராட்ட முறைக்குக் கௌரவமும் சட்டபூர்வமாக அங்கீகாரமும் அளித்திருந்தது என்பதாகப் பலருக்குத் தோன்றியது. 'சட்ட மறுப்பு இயக்கம் தொடரப்பட மாட்டாது: **இதற்குப் பிரதியாக** அரசு தக்க நடவடிக்கை எடுக்கும்' என்று அந்த ஷரத்து கூறியது.

இதைத் தவிரவும் கணிசமான லாபங்கள் இருந்தன. உப்பு சம்பந்தமான ஒப்பந்தம் தவிர,' பலவந்தமற்ற மறியல் அனுமதிக்கப்படும் என்று ஒரு விளக்கமும் ஒப்பந்தத்தில் இடம்பெற்றது. பொதுமக்களைத் தடுக்காத வரை, கீழ்ப்படியுமாறு வற்புறுத்தாதவரை மறியலில் ஈடுபடலாம். ஒருசிலரைத் தவிர மற்ற எல்லா அரசியல் கைதிகளும் விடுவிக்கப்படுவார்கள். விடுதலை மறுக்கப்பட்டவர்கள், வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தில் அதிகாரிகளுக்குக் கீழ்ப்படிய மறுத்த கார்வாலிகள், ஷோலாப்பூரில் சொற்ப காலம் நகரசபை நிர்வாகத்தை ஏற்று நடத்திய புரட்சியாளர் சிலர் ஆகியோரே. காங்கிரஸ் கமிட்டிகள் மீது இருந்த தடை உத்தரவுகளும் நீக்கப்படவிருந்தன.

இந்த ஒப்பந்தத்தினால் சுயராஜ்யம் கிடைத்துவிடவில்லை என்பதைக் காந்தி ஒப்புக்கொண்ட போதிலும், சுயராஜ்யத்துக்கு இரண்டாவது மார்க்கம் ஒன்று உருவாயுள்ளது என்றும் கருதினார். அவர் கூறினார்:

''எங்ஙனம் விவசாயி நிலத்தை உழுத பிறகு தன் கவனம் முழுவதையும் பயிர் வளர்ப்பதில் செலுத்துகிறானோ அதே போல் ஓராண்டு காலம் சட்ட மறுப்பு இயக்கத்தில் ஈடுபட்டிருந்த காங்கிரஸ் ஊழியர்களும் இனி நிர்மாணப் பணிகளில் தீவிர கவனம் செலுத்த வேண்டும்.''

யதார்த்த ரீதியிலும் நல்ல தெளிவுடனும் மகாத்மா, ''வெற்றி என்று ஏதும் இருக்குமேயானால் அது இரு தரப்பாருடைய வெற்றியுமாகும்'' என்று அறிவித்தார். ஆயின் அப்போதைக்குக் காங்கிரஸ்காரர்கள் வெற்றியின் பலன்களை எண்ணிப் பெருமிதப் பூரிப்பு அடைந்து கொண்டிருந்தனர். குறிப்பிட்ட காலம்வரைதான், குறிப்பிட்ட எல்லைகளுக்குள்தான் என்றாலும் அவர்கள் இப்போது தடையின்றி உப்புச் சேகரிக்க முடியும். கள்ளுக் கடைகளையும் அந்நியத் துணிகள் விற்கும் கடைகளையும் மறியல் செய்தால் தண்டனை பெற மாட்டார்கள். நேற்று வரை ஆட்டு மந்தை மீது பாயும் ஓநாய் போல அவர்களிடம் நடந்துகொண்ட போலீஸாரின் கண்கள் எதிரிலேயே இவர்கள் மறியலை நடத்தலாம்.

ஆனால் ஓர் அம்சம் குறித்துப் பெருத்த ஏமாற்றம் ஏற்பட்டது. பகத்சிங், சுகதேவ், ராஜ்குரு ஆகியோர் 1928ல் லாகூர் போலீஸ் அதிகாரி ஸாண்டர்ஸ் கொலை செய்யப்பட்டது தொடர்பாகத் தூக்கிலிடப்பட்டார்கள். மகாத்மா தண்டனையைக் குறைக்க வேண்டி மிகவும் சிரமப்பட்டிருந்தார். ஆனால் இர்வின் பிடிவாதமாய் இருந்தார். ''அரசு இந்த விஷயத்தில் மாபெரும் தவறு செய்துவிட்டது'' என்று குற்றம் சாட்டினார் காந்தி. அதே நேரத்தில் வெறுப்பும் கோபமும் அடைந்திருந்த பொதுமக்களை நிதானமிழக்க வேண்டாம் என்றும் கேட்டுக் கொண்டார்.

வன்முறையை வழிபடுவோரைத் தாக்கி அவர் தீர்க்க தரிசனத்துடன் பேசினார்: ''வன்முறை எனும் ஆயுதத்தை உங்களை ஆள்வோர் மீது பிரயோகிப்பதுடன் நிறுத்த மாட்டீர்கள். உங்கள் சகோதர சகோதரிகள் மீதும் பயன்படுத்துவீர்கள். உங்களைப் போலவே வன்முறையில் நாட்டம் கொண்ட மற்றவர்கள் உங்களுக்கு எதிராக அதைப் பிரயோகிப்பார்கள்!''

வருட முடிவில் கூட்டம் போடுவது என்ற பழக்கத்தை முதல் தடவையாக விட்டுவிட்டு காங்கிரஸ் ஏப்ரலில் கராச்சியில் கூடியது. ஸி. ஆரும் அவரது காரியக் கமிட்டித் தோழர்களும் வல்லபபாய் பட்டேலை அக்ராசனராகத் தேர்ந்தெடுத்தனர்.

பட்டேலின் காரியக் கமிட்டியில் ஸி. ஆர். பெயர் சேர்க்கப்படவில்லை எனக் கண்டதும் சில தென்னிந்தியப் பிரதிநிதிகள் வெளிப்படையாகவே ஆட்சேபணை தெரிவித்தார்கள். அவர்களில் ஒருவரை அழைத்து வம்பை



பாய் கூறினார்: "அவர் சார்பில்தான் நான் அவர் பெயரை வாபஸ் பெற்றேன். உங்களை விட அதிகமாக எனக்கு ராஜகோபாலாச் சாரியைத் தெரியும்." பட்டேல் கூறியது சரியே. காரியக் கமிட்டிக்கு உதவ அதில் அங்கத்தினராக இருக்கும் பெருமை வி.. ஆருக்குத் தேவையில்லை; அதற்கெல்லாம் அப்பாற்பட்டவர் அவர் என்பதைப் பட்டேல் சொல்லாமல் சொல்லி அறிவுறுத்தினார்.

1930ம் ஆண்டின் போராட்டம் பற்றிய விவரத்தில் காணப்பட்ட ஒரு வாக்கியமும் கராச்சிக்கு வந்திருந்த தென்னிந்தியப் பிரதிநிதிகளை வருத்தத்துக்குள்ளாக்கியது. அந்த வாக்கியம் தென்னகத்தின் பங்கைக்குறைத்து மதிப்பிடுவதாக அவர்கள் கருதினர். புதிய பொதுக் காரியதரிசிகளில் ஒருவர் என்ற முறையில் அறிக்கையைத் தயாரித்திருந்த ஜவாஹர்லாலிடம் வி. ஆர். பேசிய பிறகு அந்த வாக்கியம் நீக்கப்பட்டது.

கராச்சி சமாதான உடன்படிக்கையை அங்கீகரித்தது. மேலும் அதே ஆண்டில் லண்டனில் பின்னால் நடக்க இருந்த வட்டமேஜை மகாநாட்டில் காங்கிரஸின் ஏகப் பிரதிநிதியாகக் காந்தி கலந்து கொள்வதை ஆமோதித்தது.

## 36. மதுக்கடைகள் மறியல்

வேதாரண்யவாசிகள் இப்போது தங்களுக்குத் தேவையான உப்பைத் தாங்களே தயாரித்துக் கொண்டார்கள். அங்கு வெற்றி விழா நடந்தது. ஓர் ஆண்டுக்கு முன்னால் சத்தியாக்கிரகிகளுக்கு உணவு எடுத்து வந்த ஒரு கிழவியைச் சுட்டிக் காட்டினார் வி. ஆர். "அவனுடைய பாத்திரம் போலீசாரால் அன்று பறிமுதல் செய்யப்பட்டது; இன்று அவன் மறுபடியும் மகிழ்ச்சிப் பெருமிதத்துடன் வருகிறான். யுத்தத்தில் நாம் வென்று விட்டோம்" எனக் கூறினார்.

வேறு இடங்களிலும் பொதுமக்கள் தங்கள் உற்சாகத்தைக் காட்டினார்கள். வி. ஆருடைய மதிப்பு மிக உயர்ந்ததாக இருந்தது. ஆந்திரக் கடற்கரை நகரான மசூலிப்பட்டினத்தில் ஒரு மாபெரும் கூட்டத்தில் பேசவிருந்த வி. ஆரைக் குறித்து, அவருக்கு முன் பேசிய சீதாராமையா, "காந்தியின் தளபதிகளுள் முதன்மையானவர் என்று எல்லோராலும் வி. ஆர். கருதப்படுகிறார்" என்று கூறினார். பிற்காலத்தில் காங்கிரஸ் அக்ராசனராக விளங்கியவர் சீதாராமய்யா.



நேபாளத்தில் கஞ்சா பயன்படுத்தப்படுவது சட்டபூர்வமாகத் தடை செய்யப்பட்டுள்ளது. அதனால் அங்கே வரும் வெளிநாட்டு உல்லாசப் பயணிகள் மிகுந்த ஏமாற்றமடைந்தனர். ஆனால், விரைவில் அவர்களுக்கு ஒரு வாய்ப்பு கிடைத்தது, கஞ்சா புகை நுகர! கைப்பற்றப்பட்ட 250 கிலோ கஞ்சாவை போலீஸார் ஓரிடத்தில் போட்டு எரித்தார்கள். அந்தப் புகையை நுகர அங்கே நூற்றுக் கணக்கில் பயணிகள் கூடினர்கள்!
—ஹிம்மத்
—சாமி

சமாதானம் ஏற்பட்ட பிறகு ஆட்சிப் பொறுப்பில் காங்கிரசும் ஒரு பங்கை அடைந்திருப்பது போலத்தான் சில காலத்துக்குத் தோன்றியது. உதாரணமாக வி. ஆர். "காந்தி இர்வின் ஒப்பந்தத்தின் நிர்வாகம்" என்று குறிப்பிட்டுப் பேசினார்.

அரசாங்கத்தின் உயர் அதிகாரிகள் புதிய மரியாதை காட்டினார்கள். கடந்த காலத்தில் பல சந்தர்ப்பங்களில் செய்யப்பட்டது போலவே இப்போதும் தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டிக் காரியாலயத்துக்கு அனுப்பப்பட்ட கடிதங்கள் இடையில் தணிக்கைக்குள்ளாகித் தாமதமாகக் கிடைத்தன. விடுதலை பெற்ற பின் தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டியின் தலைமைப் பதவியை மறுபடி ஏற்றுக் கொண்டிருந்த வி. ஆர்., பிரதம காரியதரிசிக்கு ஒரு புகார்க் கடிதம் அனுப்பினார்.

சென்னை மாகாணத்தின் பிரதம அதிகாரியான அவர், அது கிடைத்த மறுநாளே பதில் போட்டார். 'புகார் குறித்து விசாரணை நடக்கும்' என்று சொல்லியிருந்தார். கையெழுத்துப் போடுமிடத்தில் 'இப்படிக்கு' என்று மட்டுமல்லாமல், "ஐயா, உங்களுக்குக் கீழ்ப்படிந்து நடப்பதில் கௌரவமடையும் பணியாளன்" எனக் குறிப்பிட்டுத் தாமே கையெழுத்திட்டிருந்தார்.

சமீப காலத்தில்தான் கவர்னரால் 'பொல்லாத கிளர்ச்சியாளர்' என்று வர்ணிக்கப்பட்டிருந்த ஒருவருக்கு இவ்வளவு பணிவாகக் கடிதம் எழுத வேண்டும் என்ற கட்டாயம் இல்லைதான். உடனடியாகப் பதில் வந்தது என்பதும் அதுவும் பிரதம காரியதரிசியிடமிருந்தே வந்தது என்பதும் அசாதாரணமான விஷயங்கள். இரண்டு மாதங்களுக்கு முன் என்றால் ஓர் அடித்தள ஊழியர் வி. ஆரின் புகார் கிடைத்த சில வாரங்களுக்குப் பிறகு அந்தப் புகார் கிடைத்தது என்ற அளவுக்கு மட்டுமே பதில் எழுதியிருப்பார்.

ஜூலை மாதத்தில் சென்னை அரசாங்கம் விவசாய உற்பத்திப் பொருள்களின் விலைச் சரிவால் பாதிக்கப்பட்டிருக்கும் சிறிய நிலச் சுவான்தார்களுக்கு வரிச் சலுகை அளிக்க வேண்டும் என்ற கோரிக்கையைச் சாதகமான முறையில் கவனிப்பதாகக் கோடி காட்டியது. (தொடரும்)

தமிழாக்கம்: கி. ராஜேந்திரன்



தியாகராயநகர் சோமசுந்தரம் கூடைப் பந்தாட்ட மைதானம். கூடைப் பந்தாட்டத்தின் தாயக நாட்டிலிருந்து, அமெரிக்காவிலிருந்து, வந்திருந்த விளையாட்டுத் தூதுவர்கள் தமிழகக் கூடைப் பந்தாட்டக் காரர்களோடு உக்ரமாக ஆடி வெற்றிக் கோட்டையை எட்டிப் பிடித்தனர்! அமெரிக்கக் கல்லூரிகளில் படித்துக்கொண்டே விளையாட்டுக் கலைகளிலும் தேர்ந்தவர்கள் இவர்கள். மூன்று அமெரிக்கக் கலைஞர்களின் உயரத்துக்கு முன், தமிழக ஆட்டக்காரரின் குள்ளத் தோற்றம் வேறுபட்டுத் தெரிகிறது!

படநுணுக்க விளக்கம்: '' 'action Freeze' பண்ணவேண்டுமானால் Fast aperture தரணும். இந்த ஆக்ஷன் தொடரில் முடிந்த அளவு நார்மல் லென்ஸிலேயே எடுக்க வேணும் என்று ஆசைப்படுகிறேன். கூடைப் பந்தாட்டத்தில் சரியான இந்த 'ஆக்ஷனுக்காக' அரைமணி நேரம் காத்திருந்தேன். மொத்தம் மூன்று 'ஷாட்'கள் எடுத்தேன். அதில் என் திருப்திக்கு அமைந்தது இது! நார்மல் லென்ஸ்: 500/8. எப்போ டயம் அதிகம் தருகிறோமோ அப்பொழுது டயபரம் கொஞ்சம் அதிகம் திறக்க வேண்டும். இது ஒரு ஸிம்பிள் கணக்கு! பூமியிலிருந்து விளையாட்டுக் கலைஞர்கள் எம்பிக் குதிக்கும் அழகைக் காட்ட லோ ஆங்கிளில் எடுத்ததனால்தான் முடியும். மாட்ச் இரவில் விளக்கொளியில் நடந்ததனால் 'பிளாஷ்' பயன்படுத்தினேன்.''

ஆக்ஷன் படம்: உத்ரா; விளக்கம்: குண்டுமணி

# SPORTS PICTURE PAGE

# நீலக்கடல் ஓரத்திலே



## பட விமரிசனம்

கடலோரத்திலே வாழும் மக்களைப் பற்றிய கதையல்ல. நீலக்கடல் ஓரத்திலே பரந்து கிடக்கும் ஏராளமான நிலங்களுக்குச் சொந்தக்காரரான எஸ்டேட் முதலாளியின் கதை. சொத்துக்குரியவருக்கு அதைக் கொடுக்காமல் தானே சுருட்டப் பார்க்கும் மானேஜர் ராஜப்பா (நம்பியார்)வின் கதை. புளித்துப்போன விஷயம். இதில் புதுமை சிங்களத்து எம்.ஜி.ஆர். என்று புகழப்படும் காமினி பொன்சேகா ஹீரோவாக வருவது தான். அவர் நடிப்பும்(!) பேச்சுமே புதுமை, யாக இருக்கின்றன. போதாக் குறைக்கு ராதா சலூஜா வேறு. தமிழ்ப் பட ரசிகர்கள் மயங்கும்படி இவர்களிடம் ஏதுமில்லை.

துடுக்குக்காரியாக — கட்டியாக — வாயாடியாக ஆண்மை மிக்கவளாக ஒரு பெண்ணைச் சித்திரிப்பதற்கு எத்தனையோ முறைகள் உண்டு. ஆனால் ஐந்து ஆண்பிள்ளைகளோடு, கட்டிப் புரண்டு, கராத்தே சண்டையிட்டு, புடவையைத் தார்ப்பாய்ச்சி கட்டிக் கொண்டு குஸ்தி பயிலும் முறை 'உய் உய்' சீட்டியை ஒரு சாராரிடையே உண்டாக்குமே தவிர உயர்ந்த பண்பாடாகாது. ஸ்ரீப்ரியா நல்ல நடிகை. அவருக்கு இப்படிப்பட்ட பாத்திரங்களை உருவாக்கிக் கொடுத்து அவரது இமேஜைப் பாழாக்க வேண்டாம். ஆண்களைக் கண்டால் ஒரே வெறுப்பாம் மீனு (ஸ்ரீப்ரியா) வுக்கு. அதற்கான காரணம் ரொம்ப 'அடல்ட்ஸ் ஒன்லி' காட்சியாக பிளாஷ் பாக் நிகழ்ச்சியில் காட்டப் படுகிறது. இதே போல ஆனந்துக்கு (ஜெய் கணேஷ்) பெண்களைக் கண்டாலே வெறுப்பாம்!

ஜெய் கணேஷ் இதில் கௌரவ நடிகர். ஆனால் திரையக் காட்சியில் வருகிறார்—நடிப்புக்கும் கௌரவமாக 'குட்பை' சொல்லி விட்டு. குடிகார மீனவனுகத் தேங்காய் வந்து கடையில் ஒரு நீண்ட பாட்டை, மணலில் உருண்டு புரண்டு பாடி, வாத்தியார் போஸ்டர் முன்னால் ரத்தம் கக்கிச் சாகிறார்.

மூலக் கதை, திரைக் கதை, வசனம் என்று தனித் தனியே இப்படத்துக்குச் சிரமப் பட்டிருக்கிறார்கள் மூன்று பேர். தேவையில்லாத விஷயம்.

கடற்கரைக் காட்சிகள், உப்பளங்கழிகள், பங்களாக்கள் எல்லாம் சிறப்பாக இருக்கின்றன. கதை—வசனம், டைரக்ஷன், நடிப்பு இவை தாம் இல்லை.

—கௌசிகன்

Printed by V. Murali and published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd., at the Bharathan Press, Guindy, Madras - 600 032. Editor: K. Rajendran

# பண்ணை வளத்திற்கு
# பாங்கான திறவுகோல்

TAFE

TAFE

TRUSTED
ASSOCIATION
FOR
EVER

டாபே நிறுவனத்தின் முழு
ஈடுபாடும் பண்ணை வாழ்க்கையுடன்
பின்னிப் பிணைந்துள்ளதால்
நமது உழவர்பெருமக்களின் நீடித்த
நம்பிக்கையைப் பெற்றுள்ளது.

விவசாயிகளது நல்லுறவைப்
பெற்றிருப்பதால் வேளாண்மை
வளர்ச்சிப் பணிகளுக்கு முக்கிய
பணியாற்றும் திடநம்பிக்கையை
டாஃபே கொண்டுள்ளது




TAFE 

டிராக்டர்ஸ் அண்ட் ஃபார்ம் எக்யிப்மெண்ட் லிமிடெட்
சென்னை

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப்பதிப்பு) 60 மலேயக் காசு

# உருவமோ சிறிது
# ஆற்றலோ பெரிது




நிப்போ ஹைப்பர்
பென்லைட் பேட்டரிகள்

IN/101/79

National

# நிப்போ

நீங்கள் நம்பி வாங்கிட நலமிகு சக்தி நிப்போ ஹைப்பர் பென்லைட் பேட்டரி. கால்குலேட்டர், ட்ரான்ஸிஸ்டர் ரேடியோ, ஹியரிங் எய்ட் போன்ற பல கருவிகளில் பயன்படுத்தப்படும் சக்தி மிகுந்த பேட்டரி நிப்போ-ஹைப்பர் பென்லைட் பேட்டரி.

ஜப்பானிய நேஷனல் நிறுவனத்தின் தொழில் நுட்பத்திறனுடன் கூடிய இண்டோ நேஷனல் தயாரிப்பு இது.

